Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."
ஸத்யம்வத.—Speak the Truth.
"Hitch your Wagon to a Star." "To Thine Own Self be True."



அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : Om.
ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.
புத்தகம் 14.] 1905-ம் ஜூலை. [சஞ்சிகை 3.

# FATE AND CHARACTER

OR

# The Law of Karma and Thought Building.

"We build our future thought by thought ;
For good or bad we know it not ;
Yet so the universe is wrought.

Thought is another name for fate ;
Choose then thy destiny and wait,
For love brings love and hate brings hate.

Mind is the Master of the sphere ;
Be calm, be steadfast and sincere.
Fear is the only thing to fear.

Thought like an arrow flies where sent ;
Aim well, be sure of thy intent,
And make thine own environment."—*Ella Wheeler Wilcox*.

"Nothing can bring you peace but yourself. Nothing can bring you peace but the triumph of principles."—*Emerson*.

"Not by work, nor by progeny nor by wealth, but by renunciation (of the lower self), some attained immortality."—*Kaivalyopanishad*.

"*And would we have all the world love us, we must first then love all the world*—merely a great scientific fact."—*New Thought Principle*.

"Pleasure soon exhausts us and itself also ; but endeavour never does."—*Richter.*

If you want knowledge you must toil for it ; if food, you must toil for it ; and if pleasure, you must toil for it. Pleasure comes through toil, and not by self-indulgence and indolence. When one gets to love work, his life is a happy one."—*Ruskin.*

"According as a function receives daily exercise or not, the man becomes a different kind of being in later life. We have lately had a number of accomplished Hindoo visitors at Cambridge (U.S.A.), who talked freely of life and philosophy. More than one of them has confided to me that the sight of our faces, all contracted as they are with the habitual American over-intensity and anxiety of expression, and our ungraceful and distorted attitude when sitting, made on him a very painful impression. "I do not see," said one, "how it is possible for you to live as you do, without a single minute in your day deliberately given to tranquillity and meditation. It is an invariable part of our Hindoo life to retire for at least half an hour daily into silence, to relax our muscles, govern our breathing, and meditate on eternal things Every Hindoo child is trained to this from a very early age." The good fruits of such a discipline were obvious in the physical repose and lack of tension, and the wonderful smoothness and calmness of facial expression, and imperturbability of manner of these Orientals. I felt my countrymen were depriving themselves of an essential grace of character. How many American children ever hear it said, by parent or teacher, that they should moderate their piercing voices, that they should relax their unused muscles, and as far as possible, when sitting, sit quite still ? Not one in a thousand, not one in five thousand ! Yet, from its reflex influence on the inner mental states, this ceaseless over-tension, over-motion, and over-expression are working on us grievous national harm.

"I beg you teachers to think a little seriously of this matter. Perhaps you can help our rising generation of Americans toward the beginning a better set of personal ideals."—*Talks to Teachers on Psychology by Prof. W. James.*

"*Keep the faculty of effort in you by a little gratuitous exercise every day.*"—*Ibid.*

"The general laws of habit are no wise altered thereby (by sudden conversions), and the physiological study of mental conditions still remains on the whole the most powerful ally of hortatory ethics. The hell to be endured hereafter, of which theology tells, is no worse than the hell we make for ourselves in this world by habitually fashioning our characters in the wrong way. Could the young but realise how soon they would become walking bundles of habits, they would give more heed to their conduct while in the plastic state. We are spinning our fates, good or evil, and never to be undone. The drunken Rip Van Winkle, in Jefferson's play, excuses himself for every fresh dereliction by saying, "I won't count this time !" Well, he may not count it ; and a kind Heaven may not count it ; but it is being counted none the less. Down among the nerve-cells and fibres the molecules are counting it, registering and storing it up to be used against him when the next temptation comes. Nothing we ever do is, in strict scientific literalness, wiped out.

"Of course this has its good side as well as its bad one. As we become permanent drunkards by so many separate drinks, so we become saints in the moral, and authorities and experts in the practical and scientific spheres, by so many separate acts and hours of work. Let no youth have no anxiety about the upshot of his education, whatever the line of it may be. If he keep faithfully busy each hour of the working day, he may safely leave the final result to itself. He can with perfect certainty count on waking up some fine morning to find himself one of the competent ones of the generation, in whatever pursuit he may have singled out. Silently, between all the details of his business, the *power of judging* in all that class of matter will have built itself up within him as a possession that will never pass away. Young people should know this truth in advance. The ignorance of it has probably engendered more discouragement and faint heartedness in youths embarking on arduous careers than all other causes put together."—*Talks to Teachers on Psychology and to Students on some of Life's Ideals by Prof. W. James.*

# விதியென்றாலென்ன?—அதை மதியால்வெல்லலாமா?

"தெய்வத்தானாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக்கூலிதரும்."—திருக்குறள்.

"*தான்முன்னஞ்செய்தவிதிவழிதானல்லால்*
*வான்முன்னஞ்செய்தங்குவைத்ததோர்மாட்டில்லை*
*கோன்முன்னஞ்சென்னிகுறிவழியேசென்று*
*நான்முன்னஞ்செய்ததேநன்னிலமானதே.*"—திருமந்திரம்.

ஸம்ஸ்கிருதத்தில் கர்மா என்பதை தமிழில் வினையென்றும் அவ்வினைப்பயனைப் வருவதை விதியென்றும் சொல்வார்கள். இந்த விதி யின்னதென்று ஆய்ந்துணரவல்லார் அருமையேயாயினும் இதில் நம்பாதார் நம்முள் வெகு அபூர்வமாகவே யுள்ளனர்.—இல்லவே யில்லையென்று சொன்னாலும் சொல்லலாம். மேட்டுப்பாளையத்திலுள்ள செட்டியார் ஒருவர்

விவேகசிந்தாமணியில் ஞானசாதனமான வழிகள்சொல்லி யெழுதப்பட்டு வருகிறதென்பதைக்கேட்டு, அப்பத்திரிகையை யிந்தவருஷமுதல் வாங்கத் தீர்மானித்துவிட்டு, அதன்முதல் சஞ்சிகை வி. பி. மூலமாகவந்து சேர்ந்ததும், 'கர்மத்தின் பயனுக ஜன்மம், பூர்வகர்மப்படியே எல்லாம் நடக்குமென்றால், இந்த ஜன்மத்தில் நாம் செய்யத்தக்கதென்ன? எல்லாம் முன்போட்ட விதை போலத்தானே முளைக்கும்; இப்போது நாம் பாடுபட்டாவதென்ன? எள்ளு விதைத்துவிட்டு அது கொள்ளாக முளைக்கவேண்டுமென்று பாடுபட்டால் முளைக்குமா? அப்படி யிருக்க மனிதனால் ஆகத்தக்கதென்னவென்று ஐயமேற்கொண்டு, இச்சந்தேகத்தை நீக்கினால் உமக்குப் புண்ணியமுண்டு, இல்லாவிட்டால் பாபம்வந்து பிடித்துக்கொள்ளும் என்று எழுதிவிட்டார். ஐயோ! இவர் சமுசயம் இலகுவானதா! ஆனையானைப்பட்ட ஆங்கிலேய ஐரோப்பிய மஹாபண்டிதர்களெல்லாம் வேதம், வேதாங்கங்களையெல்லாம் பாடுபட்டுப் படித்தும் உண்மையுணராது தவிக்கிறார்களென்றால், இந்த செட்டியார், கருமவிதி யின்னதென்று தெரியாது தியங்கி வருந்துவது பெரிதா? பெரிதல்ல! இவருக்குதித்த சந்தேகமும், அதனால் இவருக்குற்ற துன்பமும், சாதாரணமாக உயிர்வாழ்க்கையைப்பற்றி யுன்னும் புத்திமான்களெல்லாருக்கும் நேரத்தக்கதே. ஆனால் அதைத் தீர்த்துக்கொள்ளவழி, நமது செட்டியார் நினைப்பதுபோல், அவ்வளவு இலகுவானதாகவில்லை. பணந்தேட எவ்வளவு பாடுபட்டுழைக்கவேண்டுமென்று நமது செட்டியாருக்கு நன்றாகத் தெரியும். செட்டியாரிடம் பணம் நிறையவிருக்கிறதே அதில் கொஞ்சம் நம்மிடத்திருந்தால் வயிறாறவுண்டு பசி தீர்க்கலாமே யென்று பஞ்சத்திலடிபட்ட பஞ்சையொருவன் நினைத்தால் அவனுக்கு செட்டியார் பணம் கிட்டிவிடுமா? (இங்கு செட்டியார் என்பது பொதுவாகச் சொல்லப்பட்டதால் நமது செட்டியார் தன்னைச்குறித்துச் சொன்னதாக நினையற்க.) ஒருபோதும் வராது. புகையிலையோ, வெற்றிலை பாக்கோ, பட்டாணிக்கடலையோ, சுண்டலோ, ஏதோ ஒருசரக்கு வாங்கி வியாபாரம்செய்து பொறுமையுடன் கடையிலிருந் துழைத்தால்தான் காசு கையில் சேரும். அதுபோல, அறிவு விர்த்தியும், ஆத்மஞானமும் அதற்கு வேண்டியபடி பாடுபட்டுழைத்தால்தான் கிடைக்கும். அருளும் தெருளும் சேர்ந்தால்தான் மருளும் இருளும் நீங்கும். இதற்கு விடாமுயற்சியாய்ப் பாடுபட்டுழைக்கவேண்டும். பாடுபட்டுழைத்தால்மட்டும் போதாது. முதலில்லாமல் வியாபாரம் உண்டா? முதலின்றி இக்காலத்தில் 'கமிஷன்' (தரவு) வியாபாரம் செய்தாலும் செய்யலாம்; அறிவுதேட முதலின்றியுழைத்தால் பிரயோசனமில்லை. பக்தி சிரத்தையே அதற்கு இன்றியமையா மூலதனமாம். செட்டியார் தம் சந்தேகத்தை நீக்கினால் அதற்குத் தகுந்தகட்டணம் கொடுப்பதாகச் சொல்கிறார். ஐயோ! அருளும் தெருளும் காசுக்கும் பணத்துக்கும் வாங்கக்கூடிய சரக்காயிருந்தால் இரட்டைக் குதிரை போட்டுக்கொண்டு நாலு தேவடியாள் வைத்திருக்கும் செட்டியார்கள் துபாஷிகளெல்லாம் ஞானிகளாய் சநகராஜனைப்போ லிருப்பார்களே! அருளும் தெருளும் காசுக்கும் பணத்துக்குந்தானே கிடைப்பதருமையாயிருக்கிறது. ஐயோ! காசு வாசனையைக்கண்டால் கூட அருள்செயவல்லார் ஓடி யொளித்துக்கொள்கிறார்கள். பணங் காசின் மகிமை யப்படிப் பட்டதாயிருக்கிறது! மாசம் ஆயிரம் ஐந்நூறு என்று தேடித் தாராளமாய் தர்மத்திற் செலவிட்ட ஒரு பாரி வக்கீல்கூட தர்மவழிபற்றித் தத்துவவிசாரஞ் செய்யக் கங்கணங்கட்டவும் அவருக்கு அருள்புரியவந்த பெரியவரொருவர் "அப்பா இந்தக் காசை நீ கையாலுந் தொ

டாதே! ஒருதரம் காசைத் தொட்டையானால் அப்போபிடித்த சனி ஒன்பது வருஷத்துக்கு விடாது!" என்று சொல்லி எச்சரித்துப் போனாராம். நாம் அருளுக்கு விங்கியலைந்தபொழுது அன்னையாய் வந்தென்னை யாட்கொண்ட வீசன் "அப்பா, உன் உடல் பொருளாவியையும் எனக்கு ஒருங்கே சமர்ப்பி" யென்று ஒருக்கணத்தில் "என்னுரிமையென்னுடைமை" யெல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு நம்மை யாண்டியாய்விட்டுப் போய்விட்டார். ஆனால் நம்மவரிற் பெரும்பாலர் இவ்வார்த்தைகளி னுண்மையும், இப்படித் தன்னைக் கொடுக்கும் கொடையின் கருத்தும் உணராமல் தப்பர்த்தம் செய்துகொண்டு தடுமாறி மோசம்போகிறார்கள். அவர்களுக்கு உண்மையை உபதேசிக்கப்போனால் ஒன்று சொல்ல ஒன்றுசெய்து அநர்த்தம் விளைத்துக்கொள்கிறார்கள். ஆகையால் அபக்குவிகளுக்கு உண்மை யுபதேசம் செய்வது கூடாதென்று கண்டிப்பாய்த் தடுக்கப்பட்டிருக்கிறது.

"மறைபொருளா லோதியவோர் மந்திரத்தை வெளியிடாதே
"நிறைபொருளா லர்ச்சித்தோர்க்கு நியமவிதி யின்றேகூறு
"குறைபொருளாற் குண்மையோதிற் குற்றம்வரும் நற்றம்போமால்
"இறைமேலாணை புலம்பாதேயென் றியம்பினு ளென்னம்பாள்வாலை."

உபாசனை தெய்வத்தின் உத்தரவு அப்படியிருக்க 'செட்டியார் முறுக்குக்கு' பயந்து நாம் ஏதாவது சொல்ல அவர் ஏதாவது செய்து வில்லங்கம் விளைந்தால் அதற்கு யார் உடன்படுகிறது. இதனால் நாம் சுயநயம் பாராட்டினதாகவன்று. பக்குவமில்லாதவர்களுக்குச் சொன்னால் அவர்களைத் "தீநரகில் வீழ்த்தினதற்கொப்பாகும்" என்று வசிஷ்ட வாக்கியமிருப்பதால், இவ்விஷயங்களில் நமக்குக் கடிதமெழுதுவோருக்கெல்லாம் நாம் பதில் வரையவில்லையென்று அவர்கள் நம்மேல் கோபங்கொள்ளாதிருக்கக் கடவீர். அன்றியும் நாமே இன்னும் உபாசனை, அநுஷ்டானம், அப்பியாசம் இவை செய்துகொண்டிருக்கிறோம். பெரியோர்கள் திருவுளம்பற்றிச் சொல்லியதை அநுபவத்தி லுறுதிகண்டபின், வேதாந்த சாஸ்திரங்களையும், இக்காலத்து மேற்றிசையார் நூல்களையும் இயன்றமட்டி லாராய்ந்து அவ்விரண்டு மொத்துவருகிற அளவுக்கே நாம் பஹிரங்கமாக வெழுதக்கூடியதாயிருக்கிறது. அநுபவ ரகசியங்களைக் கண்டபடி யெழுதுவது குருவாக்குக்கு விரோதமாகுமாதலால் அக்கொடிய நிந்தனைக்காளாவது உபாஸகர் யாருக்கும் ஸாத்தியமில்லை யென்பதையும் உணரக்கடவர். இதுநிற்க. இனி விதியென்று லென்னவென்று ஒருவாறு பொதுப்பட விசாரித்து அது சம்பந்தமாயுள்ள சில தப்பெண்ணங்களை நீக்கப் பார்ப்போம்.

"தான் முன்னஞ்செய்த விதிவழிதானல்லால்
வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர்மாட்டில்லை."

———என்று திருமூலதேவர் திருமந்திரோபதேசம் செய்திருக்கிறார். இந்த ஜகமே சங்கற்பத்தினாலுண்டானது. "மனமாம் நினைவே சங்கற்பம்" என்று வாசிஷ்டத்திலிருந்து எடுத்துச்சொல்லியுள்ளோம். "Thinking is the talking of the soul with itself" என்று 'ப்ளேடோ' சொல்லியுள்ளபடி ஆத்மா தன்மயமாயிருந்து நினைப்பதெல்லாம் உடனே நினைத்தபடி தன்மாத்திரைகளாகி, ஸப்த-ஸ்பரிச-ரூப-ரஸ-கந்தங்களிலிருந்து ஐம்பூதங்களாகி த்ரிகுணங்களின் பேதவிசேஷத்தால் உண்டான விகாரங்களாலும் அவற்றின கூட்டுற

வானும் எண்ணிறந்த சிருஷ்டிவர்க்கங்களாகின்றன. ஆத்மா தானே ஒன்றை நினைக்க அது தன்முன் ஆத்மசக்தியால் அருவாய் வந்து உருவாய் நிற்க, அவ்வருவிலும் உருவிலும் 'நான், எனது' என்னும் அகங்கார மமகாரங்களாம் பற்றுதல் கொள்வதால், ஆத்மா அபிமானத்தால் அவைகளேயாகி தன்னிலைமறந்து அறியாமையால் தானல்லாதவற்றைத் தானென்று மயங்கி, தேகம் நான், இந்திரியங்கள் நான், மனது நான், புத்தி நான், அகங்காரம் நான், என்று பலவிதமாகக் கூத்தாடியும், தெளிந்த வேளைகளில், என் புத்தி, என் மனது, என் அகந்தை, என் தேகம், என்று அவற்றுக் கந்நியமாயிருந்து பின்னும் மயக்கத்தால் அவைகளில் உரிமை பாராட்டியும், பலவிதமான பெந்தங்களில் கட்டுப்பட்டுழலும்சீவனாகிறான். நாம் உண்மையாக உள்ளபடி அகங்கார மமகாரங்களை விட்டு என்ன நினைக்கிறோமோ அது அப்படியே நிகழ்வதாகிறது. ஆனால் நாம் ஒருவழி நில்லாமல், தன்னிலைதவறினதால் தனக்கு இதாஹிதம் இன்னதென்பதும் தெரியாமல், பலவாறு முன்னும்பின்னும் பொருந்தாமல் ஆசையினாலேவப்பட்டு அலைந்து சிந்திக்கிறோம். மனது ஆசையில்விழுந்து விஷயங்களைப் பற்றி சஞ்சலப்பட்டுழல்வதாலே சமுசாரம் என்று சொல்லப்படும் சலனரூபமான சுகதுக்காதிப் பிரபஞ்சங்களும் அவைகளை அனுபவிக்கக் கருவியான தேகேந்திரியாதி கருவிகரணங்களும் உண்டாயின. இவற்றில் பிரபஞ்சத்தோற்றங்கள் ஈசுவர சிருஷ்டி: சீவனது போகத்தின் பொருட்டு ஈசுவர சங்கற்பத்தால் உண்டாக்கப்பட்டவை. அவற்றால் நமக்கு ஒருதுன்பமுமில்லை. ஆனால் அவற்றுக்குச் சரியாக நம்முள் நமது மனோமய சிருஷ்டியான உட்பிரபஞ்சமொன்றிருக்கிறது. இதனாலேயே சீவனுக்கு பெந்தமும் மோக்ஷமும் உண்டாகிறது. ஸர்வசுதந்திரனான ஆத்மா (முக்தாத்மா) தன்னுடைய சங்கற்ப விசேஷத்தால் "சீவன்" என்கிற பெத்தாத்மனாகப் பரிணமித்துத் தன்னைமறந்து "கோசகாரப் புழுப்போல்" தான்நூற்ற நூல்களாம் சங்கற்பவலையிலேசிக்கி மாள்கிறான். இந்த தேகேந்திரியாதி கருவிகரணங்கள் நமக்கு எப்படிக் கிடைத்தன? போகத்தில் இச்சைவைத்து நமது எண்ணத்தில் தோன்றியதை மேன்மேலும் எண்ணி அனுபவிக்க ஆசைகொண்டதால் அவையெல்லாம் நம்முள்(அகத்தில்) வாசனைகளாகவும் (பூர்வஸம்ஸ்காரம்என்பார்இவற்றை) வெளியில்(புறத்தில்) விஷயங்களாகவும் அமையலாயின. நம்முள் படிந்துள்ள பழைய எண்ணங்களின் வாசனைகள் நிலத்தில் விழுந்த வித்துப்போல் க்ஷேத்திரமாகிய தேகத்திலிருந்து பலனைக்கொடுக்கும். இதைத்தான் கர்மபலன் என்றும், விதியென்றும் சொல்வது. நினைவும் சூக்ஷ்மத்தில்தொழிலேயாதலால் அதுவும் கர்மம்தான். எண்ணமே கர்மமூலம். ஆசையே காரணம். ஆசையில்லாவிட்டால் எண்ணம் உதிக்க ஹேதுவில்லை. எண்ணம் உதிக்காதபடி மனதை அடக்கக்கூடுமானால் ஆசைமுளைக்க வழியில்லை. ஆசையறுத்து எண்ணத்தை வேரறுப்பது ஞானமார்க்கம். மனதை வசப்படுத்திஎண்ணத்தை யொழித்து வறுபட்ட வித்துப்போல்ஆசைமுளைக்காதபடிச்செய்து ஜன்மவேரறுப்பது யோகமார்க்கம். இவையிரண்டும் ஒன்றுக்கொன்று சாதனமாம். ஆகவே, விதியென்றாலென்ன? "நாம்முன்னம்செய்த (கர்மங்களின்பலனாக அதாவது சங்கற்பங்களின் பலனாகவரும்) விதிவழிதானல்லால்"—நம்மையன்றி (வான்) தெய்வம் "முன்னஞ் செய்தங்குவைத்ததோர் மாட்டில்லை." அதாவது "விதி"யென்பது நாம் பூர்வத்தில்செய்த சங்கற்பங்கள், பலக்குறைவால் உடனே பலனைக் கொடுக்கமாட்டாமல், காலம்செல்லச் செல்லமுதிர்ந்து வளர்ந்து பலனைக்கொடுக்கும் பக்குவத்துக்கு வந்ததும், வித்திலிருந்தும் முளைகிளம்புவது

போல், வாசனாரூபமா யடங்கியிருந்த அச்சங்கற்பசக்திகள் நடத்தையாக முளைத்து சுகதுக்க ரூபமான போகபோக்கியங்களைக் கொடுக்குங்கால், அதற்கு நாம் கொடுக்கும் பேரன்றி வேறொன்றல்ல. முன்னால் நாம் எண்ணின எண்ணங்கள் ஆத்மலாபத்துக்கு ஹேதுவானவைகளாயிருந்தால், அவை நம்மை ஆத்மக்ஷேமத்துக்கு ஆஸ்பதமான வழிகளில் செலுத்தும். ஆத்மநஷ்டத்துக் கேதுவான ஆசைவழியில் நம்மெண்ணங்கள் சென்றிருந்தால், அவை இப்பொழுது போகபோக்கியங்களைக் கொடுத்து சுகம்போல்காட்டி துக்கத்திலாழ்த்தும். இப்படி பூர்வத்தில் நாம் எண்ணினபடி பலனைக்கொடுக்கும் கர்மங்கள் மூவகைப்படும். அவை, (1) சஞ்சிதம், (2) ஆகாமியம், (3) பிராரப்தம் எனப்படும்.

(1) சென்ற சரீரங்களில் செய்யப்பட்டு பலனுக்கு வராமலிருக்கும் கர்மம் சஞ்சிதம். இது ஆத்மஞான(அனுபவ)த்தால் நாசமடைகிறது.

(2) இனிவரும் சரீரங்களுக் கேதுவாய் இப்பொழுதெடுத்துள்ள சரீரத்தில் செய்யப்படும் கர்மம் ஆகாமியம். ஞானிக்கு இவற்றின் சம்பந்த முண்டாகிறதில்லை. ஏனெனில் அவன் நிஷ்காமியாதலால் எதையும் ஈசுவரார்ப்பணமாகவே செய்துவருவான். அவை அவனைப் பெந்தம் செய்யாது. கருமபலனை யிச்சிக்காமல் செய்வதால் அவன் கர்மங்களைச்செய்தும் செய்யாதவனேயாகிறான்.

(3) முன் சரீரங்களில் செய்யப்பட்டு பலனைக்கொடுக்கத் தயாராகி வர்த்தமான சரீரத்துக் கேதுவாயிருக்கும் கர்மம் பிராரப்தம். இது யாரையும் விடாது. அதன் பலனைக் கொடுத்தேதீரும். ஆதலால் போகத்தால் (அனுபவிக்கப்படுவதால்) இது நசித்துப்போகிறது என்பார்கள். ஞானிக்கும் பிராரப்தம் உண்டென்றாலும், அது அவனையன்றி வந்து பாதிக்காது. அவன்மனம் ஆத்மதிர்ஷ்டியிலே யிருப்பதால் அவனை அவனறியாமல் அணுகமுடியாது. அவனதிந்தனுகுங் காலத்தும் அவன் தனது ஆத்மநிஷ்டையின் திடபலத்தால், அந்தப் பிராரப்தத்தால்வரும் சுகதுக்கங்களை நுகராமல், தனது ஆத்மானந்தத்திலே மூழ்கிக்கிடப்பான். அப்பொழுது அவன், பிராரப்தகர்மங்கள் தானல்லாத தேகத்துக்கேயன்றி, தேகமல்லாத தனக்கு கர்மாகர்மங்கள், சுகதுக்கங்கள் முதலிய த்வந்தங்கள் ஒன்றுமில்லையென்று எங்கும் நிறைந்த ஆத்மபூரணத்தில் ஏகபோகமாக விருந்தனுபவிப்பான். இப்படியாக விதியும் கர்மமும் ஞானிக்குமுண்டாயினும், கர்மபலத்தியாகவிசேஷத்தால் அவை அவனைப் பாதிக்காது. விதியைவென்றவனே ஞானி: அவன் கர்மவேரறுத்து கிருதகிருத்தியனானதால் 'கிருதார்த்தன்' என்று சொல்லப்படுகிறான்—அதாவது செய்யவேண்டியதெல்லாம் செய்துமுடித்தவன்: ஆகவேண்டியதெல்லாம் ஆகப்பெற்றவன்.

இப்படியாக, "விதியை மதியால் வெல்லலாமா?" என்று பிறக்கும் கேள்விக்கு பதில் சொல்லவேண்டுமானால், மதி யென்னும் பதத்திற்கு அருத்தம் எப்படியோ அதையொட்டி "ஆகும்" என்றும் "ஆகாது" என்றும் சொல்லவேண்டி வரும். மதி யென்பது பூரண சந்திரனையொத்த ஆத்மபுத்தியைச் சுட்டுமானால் "ஆகும்" என்று சொல்லலாம். அப்படிக்கின்றி தேய்பிறையொத்த பேதபுத்தியைச் சுட்டி நிற்குமானால் "ஆகாது" என்று உறுதியாய்ச் சொல்லவேண்டும். பேதபுத்தியினால் வெல்லக்கூடாத விதி ஆத்மபுத்தியினால் மட்டும் எப்படி வெல்லப்படும் எனில், "வல்லிருப்புப் பாரைக்கு நெக்குவிடாப்பாரை பசுமரத்

தின் வேருக்கு நெக்குவிடும்' என்பது எப்படியோ அப்படியே. ஆத்மபுத்தி சங்கற்பநாசம் செய்து மனதை நிறுத்தவல்லார்க்கே யுதிக்கும். "அபேததரிசனம் ஞானம்" என்றிருப்பதால் அந்த ஆத்மபுத்திக்கு ஆத்மசக்தி பூரணமாயுண்டு. பூரணமான ஆத்மசக்தியினால் பங்கப்பட்ட சக்தியாம் பூர்வஸம்ஸ்காரவாசனை எளிதில் வெல்லப்படும். பேதபுத்தி பெந்தரூபமானதால் அதற்கு விதியை வெல்லும் சக்தியில்லை. ஆனால் பேதபுத்தியுள்ளாரும் அப்புத்தியை விட்டு கர்மவேரறுத்து கிருதார்த்தர்களான அடியாரடிபணிந்து அவர் அருள்பெற்று அவர் காட்டிய வழியில் ஊக்கமுடன் உழைத்துச்சென்றால், கெட்டவாசனைகளை நல்ல வாசனைகளால் மாற்றி, மலினவாசனைகளைச் சுபவாசனைகளால் கெடுத்து, 'சிரவண, மனன, நிதித்தியாசன' விசேஷங்களாலும் சத்ஸங்க விசேஷத்தாலும் சுபவாசனை மேலிட்டகாலத்தில் ஸத்குருகடாக்ஷம்பெற்று ஞானமெய்தி ஆசாபாச வேர்களை யடியோடறுத்து காமங்களை யெல்லாம் காட்டுத்தீயில்பட்ட வாழைமரங்கள்போல் எளிதில் எரித்துவிடலாம். அருச்சுனன் காண்டாவன மெரித்ததுபோலும், ஹனுமார் அசோகவனத்தைக் கொளுத்தினது போலும், திட அப்பியாசமும் தீரஞானமுமுள்ள வீரன் தனது கர்மங்களையெல்லாம் பொசுக்கி ஞானசூரியனாக ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறான்.

ஜநந பரம்பரையோடொன்றாக ஒப்பிட்டுப் பார்த்தால், கர்மம் என்றும் விதியென்றும் சொல்வது, இந்த எண்சாண் தேகத்தைமட்டும் ஒட்டிப்பார்த்தால் பழக்கவாசனையாக விருந்து நடத்தையாகப் படிந்து விதியைப்போலவே இத்தேகத்தைப்போட்டு ஆட்டிவைக்கும். நாம் நினைக்கும் ஒவ்வொரு எண்ணமும் கல்லிலெழுத்துப்போல் நம் தேகத்தின் அணுப்பிரமாணக் கூட்டங்களில் பதியப்பெற்று, நரம்புகளின் வழியாக நம்மைப் பாதிக்க வல்லதாம். ஒரு வார்த்தை சொன்னால் அது ஒரு எண்ணமுதிக்க ஏதுவாகிறது. அந்த எண்ணத்தை எண்ணிப் பழகினால், அது பழக்க மேலீட்டால் நம்மையன்றி நம்மிலுண்டாகி நம் தேகத்தையாட்டுவதாயிருக்கிறது. நாம் ஸ்வயஞானமின்றிச் செய்யும் சீரணித்தல், சுவாசித்தல் முதலாக, நடத்தல் படுத்தலீறாகவுள்ள எல்லாச் செய்கைகளும் பலஜன்மங்களில் அல்லது ஒரு ஜன்மத்திலுண்டான பழக்கவாசனையால் உண்டானதன்றி வேறல்ல. வழியறிந்து முயற்சித்தால் ஸ்வாசம் விடல், சீரணித்தல், ஹிருதயமடித்தல், நாடியோட்டம் முதலாக எல்லாம் நம்மிஷ்டப்படி நடக்குமாறு மறுபடியும் செய்துகொள்ளலாம். பழக்கவாசனை பலத்தால் சமயோசித சாமர்த்தியமாய் சந்தர்ப்பாசந்தர்ப்பங்களில் உத்தமமாக நடந்து கொள்ளுமியல்பே 'இயல்பு'—'சுபாவம்' என்றும், ஒழுக்கம், நடையென்றும், சத்குணம் என்றும் சொல்லப்படும். இப்படிப்பட்ட சத்குண சம்பத்து பழக்க வாசனையால் வருவதால், அது நன்றாகவும் பூரணமாகவும் படியும்படி செய்வதோர் வகையே உண்மையான வித்யாப்பியாசமாம். இந்த வித்யாப்பியாசம் இப்பொழுது உள்ளபடி யில்லவேயில்லை. சத்குண சம்பத்துண்டாகப் போதிக்கக், குழந்தைகளின் குணமறிந்து குற்றமறிந்து மனதினதத்துவமுமறிந்து உபாத்தியாயரின் அனுபவ விசேஷத்தாலுண்டான நுட்பபுத்தியால் சமயோசித சாமர்த்தியமாகப் பிள்ளைகளைப் பழக்குவதாம் பயிர்ச்சியே காரணமாம். இந்தமனப் பயிர்ச்சி பூர்வகாலங்களில் குருகுலவாச சம்பிரதாயத்தால் சிறுவர்க்குப் பூரணமாக சித்தித்து வந்தது. இராமாயணத்திலும் பாரதத்திலும், சிறுவரைப் பழக்கும் விதம் பூரண

மாக விளக்கப்பட்டிருக்கிறது. அதையொட்டியே பண்டைக் காலங்களில் குரு-சிஷ்ய சம்பிரதாயமிருந்த பொழுது சிறுவர் பயிர்ச்சிபெற்று வந்தார்கள். இப்பொழுது ஆடுமாடுகளை மந்தையில்கொண்டுபோய் மறிப்பதுபோல் பிள்ளைகளை நூற்றுக் கணக்காகப் பள்ளிகளில் அடைத்து ஏதோ சில பாடங்களைப் போதித்து எட்டுப்படிப்புமட்டோடே வீட்டுக்குத் துரத்திவிடுகிறார்கள், அப்படி செய்வதுசரியல்ல. ஆங்கிலேயர் அமெரிக்கர்களும் நமது வழி பற்றி வருகிறார்களென்பது அவர்களில் மேலானவர்களாயுள்ளவர்கள் குழந்தைகளுக்கு வித்யாப்பியாசம் செய்வகையைப்பற்றி யெழுதியிருப்பதாலும் இன்னும் எழுதிவருவதாலும் தெரியவரும். கிண்டர்கார்டன் முறையென்பது இந்த ஆத்மவித்தையைக் குழந்தைகளுக்கு ஹிதமாகப் போதிக்கும் வகையன்றி வேறல்ல. இதையுள்ளபடிபோதிக்க உபாத்தியாயர்கள் உலகானுபவ முள்ளவர்களாயும் மனோதத்துவ முணர்ந்தவர்களாயும் நுட்பபுத்தியுள்ளவர்களாயுமிருக்கவேண்டும். இப்பொழுது புதிதாயேற்பட்டுள்ள பிரதமவித்யாபோதனமுறையேற்பாட்டில் பிரதமபாடசாலையுபாத்தியாயர்கள் தங்கள் திறத்தைக்காட்ட நிரம்ப இடங்கொடுக்கப்பெற்றிருக்கிறார்கள். அவர்கள் உண்மையுணர்ந்து உள்ளபடிபோதிக்கக் கூடியவர்களாக வேண்டுமென்றே, வித்யாபோதனைக் கவசியமான விஷயங்களையும் தத்துவங்களையும் ஆங்கிலேயமுறைக்கொப்ப நமது பூர்விக தர்ம ஏற்பாட்டை யொட்டியே யெழுதிவருகிறோம். இதை நம்மவரில் பெற்றோரும் மற்றோருங்கூடக் கவனித்துச் சிந்தித்துக் கிரகித்து வந்தால் மிகவும் நலமாயிருக்கும்.

“சித்திரமுங் கைப்பழக்கஞ் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்த
நடையு நடைப்பழக்க நட்புந் தயையுங்
கொடையும் பிறவிக் குணம்.”—ஔவையார்.

செட்டியார் தம் கேள்விக்கு பதிலில்லையென்று குறைகூற விடமின்றி அவர் சங்கைக்குத் தக்க பதிலும் பெரியோர்வாக்காலே கூறி முடிப்போம். தாயுமானவர் ‘தன்னறிவே குருவாக’த் தனக்குத்தானே சொல்லிக் கொள்கிறார்:—

“இடப்பொருளே வலைக்குறித்து மடப்புகுநா யெனவே
யெங்கேநீ யகப்பட்டா யிங்கேநீ வாடா!
மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே! நிராசை
மன்னிடமே யிடம்அந்த மாநிலத்தே பொருளும்!
திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல்
செய்யுமிந்த நிலைநின்றோர் சனகன்முதன் முனிவர்!
கடம்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்
கட்டான நிகளபந்தக் கட்ட விழப் பாரே.”

ஓம் தத் ஸத்.

# "The Reveries of a Bachelor."

A STUDY IN "THE ASSOCIATION OF IDEAS," AND THE LAW OF MENTAL HABIT.

(By A Confirmed Bachelor.)

"You remember that Consciousness is an ever flowing stream of objects, feelings and impulsive tendencies. We saw already that its phases or pulses are like so many fields or waves, each field or wave having usually its central point of liveliest attention, in the shape of the most prominent object in our thought, while all around this lies a margin of other objects more dimly realized, together with the margin of emotional and active tendencies which the whole entails. Describing the mind thus in fluid terms, we cling as close as possible to nature. At first sight, it might seem as if, in the fluidity of those successive waves, everything is indeterminate. But inspection shows that each wave has a constitution which can be to some degree explained by the constitution of the waves just passed away. And this relation of the wave to its predecessors is expressed by the two fundamental 'Laws of Association', so-called, of which the first is named the Law of Contiguity, the second that of Similarity.

"The *Law af Contiguity* tells us that objects thought of in the coming wave are such as in some previous experience were *next* to the objects represented in the wave that is passing away. The vanishing objects were once formerly their neighbours in the mind.

"The *Law of Similarity* says that when Contiguity fails to describe what happens, the coming objects will prove to *resemble* the going objects, even though the two were never experienced together before. In our 'flights of fancy,' this is frequently the case.

"If arresting ourselves in the flow of reverie we ask the question, "How came we to be thinking of just this object now?" We can almost always trace its presence to some previous object which has introduced it to the mind, according to the one or other of these laws. The entire routine of our memorized acquisitions, for example, is a consequence of nothing but this Law of Contiguity......In dry and prosaic minds, almost all the mental sequences flow along these lines of habitual routine, repetition and suggestion.

"In witty imaginative minds, on the other hand, the routine is broken through with ease at any moment; and one field of mental objects will suggest another with which perhaps in the whole history of human thinking it had never once before been coupled. The link here is usually some *analogy* between the objects successively thought of,—an analogy often so subtle that, although we feel it, we can with difficulty analyze its ground; as where, for example, we find something masculine in the colour red and something feminine in the colour pale blue, or where, of three human beings' characters, one will remind us of a cat, another of a dog, and the third perhaps of a cow.

"Your pupils whatever else they are, are at any rate little pieces of associating machinery. Their education consists in the organizing within them of determinate tendencies to associate one thing with another,—impressions with consequences, these with reactions, those with results, and so on indifinetely. The more copious the associative systems, the completer the individual's adaptation to the world."—*Talks to Teachers on Phychology by Prof. W. James.*

## ஓர் பிரமசாரியின் மனோராஜ்ஜியங்கள்.

(FROM IK MARVEL'S "REVERIES OF A BACHELOR.")

THOUGHT SYMBOLS :— { OBJECTIVE : Smoke, Flame, Ashes. SUBJECTIVE : Doubt, Happiness, Misery.

(புகை—சந்தேகம் ; ஜ்வாலை—சந்தோஷம் ; சாம்பல்—துக்கம்.)

### முன்னுரை.

எனக்கு கிராமத்தில் ஒருவீடு இருக்கிறது. அது ஒரு குடிசைக்குச் சற்று மேற்பட்ட அந்தஸ்துள்ளதாயிருக்கும். அதில் ஒரு ஏழை கிரகஸ்தனைக் குடிவைத்து என் சொற்ப நிலத்தையும் தோட்டத்தையும் அவனிடத்திலேயே குத்தகைக்கு விட்டிருக்கிறேன். நானும் வருஷத்தில் இரண்டொருதடவை கிராமத்தைச் சுற்றிப்பார்க்க அங்கேபோவதுண்டு.

அவ்வீட்டிற்குள் ரேழியைத் தாண்டிப் போனவுடன் வலதுபுறத்தில் ஒரு சிறு அறை இருக்கிறது. அதில் இரண்டு நாற்காலிகளும் ஒரு "ஈஸிசேர்" என்று சொல்லப்பட்ட சாய்ப்பு நாற்காலியும் ஒற்றைக்காலுள்ள ஒரு சக்ரமேசையும் போடப்பட்டுக் குளிர்காய இருப்புக்கம்பிகளால் மூடப்பட்ட ஒருகோட்டை அடுப்பும் கட்டப்பட்டிருக்கும். இவ்வறைக்குள்ளிருந்து திறக்கப்படும் ஒருகதவுக்கப்பால் என் பிரமசாரி படுக்

கைக்குமட்டும் போதுமான ஒற்றைச் சன்னலுள்ள என்சிறு படுக்கைஅறை இருக்கிறது. நான் படுக்கையிலிருந்து எழுந்ததும் பார்க்கும்படியான இடத்தில் ஒருமனதிற்கிசைந்த மங்கையின் அழுக்கடைந்த படம் ஒன்று மாட்டப்பட்டிருக்கும்.

இவ்வுலக முழுவதிலும் இவ்வொரு வீட்டிற்குத்தான் நான் ஏகபோக சொந்தக்காரன் என்று தைரியமாய்ச் சொல்லிக்கொள்ளக் கூடியவனாயிருக்கிறேன். ஆகவே அவ்வீட்டின்மேலுள்ள அதிகாரத்தை என்னிஷ்டப்படி செலுத்துவதில் எனக்கு மிகவும் திருப்தி. நான் கிராமத்துக்குப் போகும் போதெல்லாம் தடவைக்கு ஏதாவது ஒரு சாமானாவது உடைக்காமல் வருவதில்லை. காலையில் தூங்கி எழுந்ததும் ஜன்னல்கதவு இலகுவாய்த் திறக்க வராவிட்டால் என் செருப்புக்காலால் கதவிலிருந்து இரண்டொரு கண்ணாடித்துண்டுகளை உடைத்துவிட்டு நல்லகாற்று உள்ளேவர வழிசெய்வேன். "ஈஸிசேரில்" சாய்ந்துகொண்டு என் கால்களைச் சுவற்றில் உதைத்து வழுவழுப்பாய்ப் பூசப்பட்டிருக்கும் சன்னக்காரையைத் துளைத்துவிடுவேன். இக்குற்றங்களுக்காக என்னிடமிருந்து நஷ்டத்தொகை வசூல்செய்ய வீட்டுக்காரனாவது கூச்சலிட்டுக் கோபித்துக்கொள்ள மனைவியாவது எனக்கில்லை என்பதை நினைத்து தனக்குத்தானே இரைந்து சிரித்துக்கொள்வேன்.

இப்படி ஓட்டைக்கதவும் உடைந்த சன்னலுமா யிருக்கப்பட்ட இவ்வறையில் குளிர் காய அவ்வளவு பெரிய அடுப்புவேண்டியதவசியமே. இருட்டினவுடன் சாப்பிட்டுவிட்டுப் படுக்கைக்குப் போகுமுன் விளக்கையணைத்துவிட்டு நிரம்ப விறகும் கரியும்போட்டு அடுப்பைமூட்டி அதற்குநேராய்க் காலை நீட்டி சாய்ப்புநாற்காலியிற் சாய்ந்துகொண்டு, உலகத்து மாந்தர்களில் ஆயிரத்தி லொருவனே அனுபவிக்க பாக்கியம்பெற்ற ஆனந்தமான மனோராஜ்ஜியத்தை ஆண்டுகொண்டிருப்பேன்.

அடுத்த அறையில் வீட்டிற் குடியிருப்பவனும் அவன் மனைவியுமாகச் சேர்ந்து அவர்களுடைய இரண்டு குழந்தைகளையும் தூங்கச் செய்வதற்காகக் கலந்து பேசிக்கொள்ளும் தந்திரோபாயங்களெல்லாம் என் காதில் விழும். இதிலேயே அவர்களுக்கு ஒருமணி நேரம் சென்றுவிடும். (எனக்கு மணிதெரிய வேண்டுமானால் அடுப்பில் நெருப்பின் ஸ்திதியைப் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டுமே யல்லாது, நான் கிராமத்துக்குக் கடியாரம் கொண்டுபோவதில்லை.) 10 மணி சுமாருக்கு விறகெல்லாம் எரிந்தாய்விடும்; பிறகு அங்குமிங்கும் சிதறிக்கிடக்கும் மிகுந்த சுள்ளிகளைப் பொறுக்கித் தணலின்பேரில் போட்டு அவை தீப்பற்றி ஜ்வாலையிட்டு எரிந்து அவிந்துபோவதைக் கவனித்துப் பார்த்து நமது வாழ்நாட்களின் சுகதுக்கங்களும் இவ்விதமே தோன்றி அழிகின்றன என்று விரக்தியடைவேன். பிறகு தணலின் வெளிச்சத்தைக்கொண்டே தட்டித் தடவிக் கட்டிலில் போய்ப்படுத்து, அங்குள்ள பரிசுத்தமான காற்றும் உடைந்த ஜன்னல்களுமே கொடுக்கக்கூடிய ஆநந்தநித்திரையில் மூழ்கிவிடுவேன். இது நிற்க.

நான் போனதடவை கிராமத்துக்குப் போயிருந்தபொழுது, அன்றிரவு படுக்குமுன் அநேக விஷயங்களைப்பற்றி யோசிக்கலானேன். இந்த வருஷம் கண்டுமுதல் இவ்வளவாயிற்றென்றும், போனவருஷத்துக்கு இவ்வருஷம் பழுதில்லையென்றும், தோட்டத்தைச் சுற்றி ஒருபக்கம் மதில் எழுப்பவேண்டுமென்றும், பூண்டுமுளைத்துக் கரம்பாய்க்கிடக்கும் மற்றொருபக்கத்தைக் கொத்தி சீர்திருத்திப் பலன்கள் போடவேண்டுமென்றும்,—கடைசியாய், இவ்வளவு யோசனைகளென்னத்துக்கு? நாம் ஒன்றியாய்க் காலம் கழித்து ஆடிப்பாடி அமர இந்தப் பழைய வீடே போதாதா என்றும், இப்படி எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணுகையில் தற்செயலாய் என் யோசனைகளெல்லாம் ஒரு நாளும் செல்லாத ஒரு மார்க்கத்திற்சென்று என் மனதை முற்றிலும் கவர்ந்துகொண்டு தனக்குத்தானே அழவும் சிரிக்கவும் செய்தமையால் மறுநாள் தூங்கி எழுந்ததும் முன்னிரவு யோசித்ததை எல்லாம் ஞாபகமிருந்தவரையில் பின்வருமாறு எழுதிவைத்தேன்.

ஏதோ—ஸம்ஸாரத்துக்குரிய அடுப்பெரிவதைப் பார்த்ததினாலோ, அல்லது அடுத்த அறையில் குழந்தைகளின் அழுகைக்குரலைக்

கேட்டதனாலே—(எனக்கு வயது இருபத்தைந்து இன்னும் விவாகம்செய்துகொள்ளவில்லை)—இல்லறத்திலிறங்கலாமா என்றயோசனை பிறந்தது.

உடனே மிகுந்திருந்த விறகுகளை எடுத்து அடுப்புவாயில் வைத்து நாற்காலியில் தைரியமாய் உட்கார்ந்துகொண்டு “இனி விவாகத்தைக்கண்டு பயப்படுவதில்லை இந்த யோசனைகள் எந்தக் காடுமேடெல்லாம் இழுத்துக் கொண்டுபோனாலும்சரி கூடவே போவேன். விறகு அணைந்துபோய்த் தூக்கம்வருமட்டாவது இந்த யோசனையை நழுவவிடுவதில்லை” என்று தீர்மானித்தேன்.

விறகு பச்சைவிறகாதலின் இலகுவில் தீப்பிடிக்க இடங்கொடுக்கவில்லை. சீறிக்கொண்டு புகைய ஆரம்பித்தது. “ஜ்வாலைக்கு முன் எப்போதும் புகைகிளம்பத்தான் கிளம்பும். அப்படியே மனது ஒரு தீர்மானத்துக்கு வருமுன் சந்தேகங்கள் கிளம்புவதும் சகஜந்தான்” * என்று நினைத்தேன்.—அதுமுதல் என் யோசனைகளெல்லாம் பின்வரும் மார்க்கமாய்ச் செல்ல ஆரம்பித்தன : அதாவது :—

[* இங்கு, “அடுப்பில் நெருப்பின்றிப் புகை யுண்டாகாதுபோல மனதில் சங்கற்பமின்றிச் சந்தேகமுதிக்காது.”—என்பது மனோதர்மம்.]

## I. முதல்ராச்சியம் :—புகை—என்றால் சந்தேகம்.

SYMBOLOGY :— { OBJECTIVE : Smoke.
SUBJECTIVE : Doubt.

விவாகமா? மனைவியா? ஆம்விவாகம்தான்.

ஏன் ? என்னத்துக்கு?

ஏன் வேண்டாம் ? ஏன் செய்யக்கூடாது ?

ஆனால் யோசிக்க வேண்டாமா ? பயப்பட வேண்டாமா ? அப்பா ! நினைத்தாலே நடுக்கமாயிருக்கிறதே ! ஒரு ஏழைமனிதன் தான் பாடுபட்டுத் தேடின பணமுழுவதும் போட்டுத் தன் அதிர்ஷ்டத்தைப் பரிசோதிக்க எண்ணி ஒரு ஏல வியாபாரத்தில் (lottery) சீட்டு வாங்குப்பக்ஷத்தில் பயப்படாமலும் நடுங்காமலும் சந்தேகிக்காமலும் இருப்பானா?

ஒருவன் தன்னிஷ்டப்படிக் கோயிற்காளைபோற் கவலையற்றுத் திரியும் தனிமையின் சுவாதீனத்தையும் சுகத்தையும் கௌரவத்தையும் விட்டுவிட்டுத், தொட்டால் குரங்குப்பிடியாய் நிர்தாக்ஷண்யமாய் ஆயுசு முழுவதுக்கும் பிடித்துக்கொள்ளும் விவாக விலங்கத்தில் மாட்டிக்கொள்ளுமுன் கொஞ்சம் பயப்படாமலும் யோசிக்காமலுமிருக்க முடியுமா? இதுவரையில் தங்குதடையில்லாமல் உலகமுழுவதும் மனோராச்சியத்தைச் செலுத்திவந்த ஒருவன், நாற்புறமும் ஓட வழியில்லாமல் தடுத்துச் சுவரெழுப்பப்பட்ட இல்லறக்கோட்டைக்குள் “இனி இதில்வரும் சுகதுக்கங்களுக்கும் கஷ்டநிஷ்டூரங்களுக்கும் நான் ஈடுகொடுத்து, இதைவிட்டு ஓடிப்போகாமலும் இதற்குப் பழுதுவராமலும் உடலையும் உயிரையும் கொடுத்து இதைக் காத்துக் கொள்வேன்” என்று வாக்களித்து நுழையுமுன், குபுகுபென்று புகைபோற்கிளம்பும் சந்தேகங்களில்லாமல் நுழைவதுண்டா ? இதுவரையில் பிறருடைய கவலைகளையும் வியாபாரங்களையும் சுகதுக்கங்களையும் கண்டு வேடிக்கை பார்த்துக்கொண்டும் இவ்வேடிக்கைகள் எங்கே மனதுக்கு சந்தோஷகரமாயிருக்குமோ அங்கே நுழைந்துகொண்டும் எங்கே மனதுக்கு புண்படுத்துமோ அவ்விடத்தைவிட்டு விலகிக்கொண்டும் திரிந்த ஒருவன் கடைசியில் அதேகவலைகளையும் வியாபாரங்களையும் சுகதுக்கங்களையும் தானே வாரிக் கூசாமல் மேல் போட்டுக்கொள்வானா? இதுவரையில் தினம் அற்பசங்கடங்களிலிருந்து தப்பித்துக்கொண்டு விளையாட்டுப்போற் காலந்தள்ளிவந்த ஒருவன் கஷ்டங்கள் வந்து மூண்டுகொண்டால் தப்பிக்கவழியில்லாத விவாகம் என்னும் விலங்குக்குள் வலுவிற்போய் மாட்டிக்கொள்வதுண்டா ? இவ்வளவுநாளாய் ஒருவேலையும் செய்யாமல் ஒவ்வொரு நிமிஷமும் ஆகாயக் கோட்டை கட்டிக்கொண்டு திரிவதில் அலுக்காத இம்மனது இனிப் பெண்டுபிள்ளைகளைக் கட்டிக்கொண்டு அவர்கள் கடனிழவுக்கு சம்பாதித்துப்போட்டழுகிற வேலையில் பிரவேசிக்குமா ? அப்படியானால் இத்தனைநாளாய் அனுபவித்த ஆனந்தக்கனவுகளெல்லாம் எங்கேபோகும் ? இல்லறக்கோட்டையிற் புகுந்த மறுநிமிஷமே ஆகாயக் கோட்டைகளெல்லாம் ஆகாயத்திலேயே பறக்கவேண்டியது

தான். இதுகாறும் கொண்ட உயர்ந்தகொள்கைகளும் கண்ட இனியகனவுகளும் ஏட்டுச்சுரைக்காயாகப் போய்விடும். இல்லறத்தின் சிறப்பைப்பற்றி பெரியோரிடம் கற்றதும் கேட்டதுமெல்லாம் அவலமாய்ப்போமன்றோ?

நல்விருந்துண்டு நாற்காலியிற்சாய்ந்து பொழுதுபோகாவிட்டால் மனோதர்மத்தினாலே சூன்யமான ஆகாசத்தில் சிருஷ்டிக்கப்படும் அப்ஸரோகந்தர்வ கன்னிகைகளைக் காட்டிலும் நமக்கு மனைவியாய் வாய்ப்பவள் அழகாயிருக்கப் போகிறாளா? எந்தக்குழந்தைகள் தானாகட்டும், நாம் கனவிற்கண்டு கொஞ்சி விளையாடும் குழந்தைகளைப்போல் அவ்வளவு அழகாகவாவது தொந்திரவு செய்யாமலாவது இருக்குமா? நமது மனதென்னும் பாழான அந்தப்புறத்தை அதில்படிந்து கிடக்கும் கவலைகளாகிற குப்பைகளை அகற்றிப் பிரகாசிக்கச் செய்கிறவளான, நம்மனோதர்மத்திலுதித்த சாந்திதேவியைப்போல் உத்தமியான பத்நீ உலகத்தில் அகப்படப்போகிறாளா? கும்பகோணம் சுப்பாசாரியார் "ஹோடலில்" சாப்பிட்டுவிட்டு "காலேஜ்" மாடியில் காற்றுவாங்கும்போது நமது மூளையில் எண்ணங்கள் நிறைந்திருந்ததைக் காட்டிலும் நமது வீட்டில் ஸம்ஸாரத்துக்கு வேண்டிய சாமான்கள் நிறைந்திருக்கப் போகிறதா? கற்பகவிருக்ஷம், காமதேனு, அக்ஷயபாத்திரம் இவைகளைப்பற்றிக் கதைகேட்டபிறகு நாம் கனவிற்காணும் பொற்குவியலைக்காட்டிலும் அதிகமாய் சம்பாதித்து அனுபவிக்கப் போகிறோமா?

கடைசியாய் என்னதான் வேண்டாமென்றாலும், பெற்றோருடைய நிர்ப்பந்தத்தினாலோ வேறு எக்காரணத்தினாலோ, விவாகம்செய்துகொள்ளத்தான் வேண்டுமென்று கடமையாய் முடிந்துவிட்டால் பிறகு என்னசெய்வோம்? உடனே விவாகத்துக்கேற்ற கன்னிகையைத் தேடுபவன்போல் வீட்டுக்கூரையை அண்ணாந்துபார்த்தேன். என்னுபாத்தியாயர்களில் ஒருவர் தன்னிடத்தில் படிக்கும் பிள்ளைகளுக்கெல்லாம் தன்னைக்கேட்டே கலியாணம் செய்யவேண்டுமென்று ஒருசட்டமேற்பட்டால் நலமாயிருக்குமென்பார். கலியாணத்துக்குப் பெண்தேடுவது முதல் முடித்துவைக்கிறவரையில் எல்லாக்காரியங்களையும் அவரே ஒப்புக்கொண்டாலும் எனக்கு சம்மதம்தான். இனிமேல் மூட்டை கட்டிக்கொண்டு ஊர் ஊராகப்போய்ப் பெண்தேடுவோமா? அல்லது வதூவரர்களுடைய ஆஸ்தியில் நூற்றுக்கைந்தாறு வாங்கிக்கொண்டு முடித்துவைக்கிற தரகர்களைக்கொண்டு விசாரிப்போமா?

நான் மற்றக் கோழைமனத்தினோர் அசாத்தியமென்று விட்டுவிடும் அநேககாரியங்களை மிகப்பொறுமையோடு ஜயாபஜயத்தைப் பாராட்டாமல் செய்திருக்கிறேன். ஆற்றில் சிவப்பாய் வெள்ளம் வரும்போது, தெளிவுஜலத்தில் வெள்ளைவேஷ்டி துவைப்பதற்காக, காலை 5-மணி முதல் 9-மணி வரையில் ஊற்றுப்போட்டு அது எவ்வளவுதான் கலங்கினாலும் அதைரியப்படாமல் தெளிவுகாணும் வரை இறைத்திருக்கிறேன். வீட்டில் பசுமாடு அறுத்துக்கொண்டு ஓடிப்போய்விட்டால் அது மணிக்கு எட்டுமைலோடினாலும் சரி, சளைக்காமல்கூடவே ஓடி அதைப்பிடித்து வந்திருக்கிறேன். ஆனால் உலகத்தில் கோடிக்கணக்காய்த்திரியும் இரண்டுகால் பசுக்களாகிற பெண்பால்களில் ஒரே ஒரு கன்னிகையை, பொறி, வலை, தூண்டில் இவைகளில்லாமலும், போலீஸ்ஜவான், கத்தி, துப்பாக்கி, விலங்கு முதலிய சாதனங்களில்லாமலும், பிறகு இஷ்டப்படாவிட்டால் தள்ளிவிட்டு வேறொரு பெண்ணைக் கலியாணம் செய்துகொள்வோமென்கிற சுவாதீனமில்லாமலும்—பிடித்தபிறகு ஒருக்கால் ஆடுதிருடப்போய் கரடியின் கையிலகப்பட்ட கதையாய் *(பாணினியிற்கூட அகப்படாத ஓர் லக்ஷணைப்படி) நாம் அவளை விலங்கிடப்போனது போக அவள் நம்மை விலங்கிட்டு விடுவாளோ என்கிறபயத்தோடும், தேடுகிறதென்றால் யார்தான் யோசிக்கமாட்டார்கள்?

நல்லது! விவாகம் முடிந்துவிட்டதென்று வைத்துக்கொள்வோம். கலியாணம் கொண்டாட வரவேண்டிய பேர்களெல்லாம் வந்து போய்விட்டார்கள். இனி நமக்குத் தொந்திரவிராது என்று நாம் மனப்பூர்வமாய் நம்பி

* "By a strange metanomy not laid down in the books."

யிருக்க, எத்தனைபேர் நம்மனைவிக்கு ஒன்றுவிட்ட அத்தான் இரண்டுவிட்ட அம்மாஞ்சியென்று தினமொருவராகக் கலியாணம்கழித்து ஒருவருஷமாகியும் வந்து போய்க்கொண்டிருப்பார்கள்! எத்தனை வேலையற்ற மைத்துனர்கள் தங்கள் தங்கை கலியாணியைப்பார்த்து நாளாய்விட்டதால் க்ஷேமம் விசாரித்துப் போக வந்ததாகப் பாசாங்கு செய்துகொண்டு விருந்துக்கு உட்காருவார்கள்! எத்தனை அத்தைக் கிழவிகள் தங்கள்குழந்தை கலியாணியோடு ஒருமாசம் இருந்துவிட்டுப்போக ஆசையாயிருக்கிறதென்றும், ஸம்ஸாரத்தில் அடிபடாத பச்சைக்குழந்தையாதலால் அவளுக்குத் தாங்கள் புத்திசொல்லிவிட்டுப் போகவேண்டுமென்றும், தங்கள் அருமைப்புதல்வி என்னகுற்றம் செய்தாலும் அவளை அடிக்காமல் கூடியமட்டும் நல்லவார்த்தையாகவே சொல்லித் திருத்தவேண்டுமென்று நமக்கு சிபார்சு செய்துகொண்டும், நம்வீட்டில் கூடாரமடித்துவிடுவார்கள்! பிறகு இதெல்லாம் போதாதென்று மாமனாரே நேரில்வந்துவிடுவர். வந்து தன்குழந்தை கலியாணியின் கையைப் பிடித்துக்கொண்டு அவளெதிரிலேயே நமக்குப் புத்திசொல்ல ஆரம்பித்துவிடுவர். நாம் என்னசெய்ய உத்தேசித்திருக்கிறோமோ அதற்கு முற்றிலும் மாறாகவே புத்திசொல்வரென்பதற்குத் தடையேயில்லை. இவர்களெல்லாருக்கும் மேலாய் மகாசனம் (முன்னேபின்னே மூன்நூறு ராத்தலாவதிருக்கமாட்டாள்) பொருந்திய மாமியாரம்மாளே வந்துவிடுவார்களானால், உக்கிராணத்து சாவியை அவர்கள் கையில் சமர்ப்பித்துவிட்டு நாம் வீட்டுக்கு வெளியே நடக்கவேண்டிய சங்கதிகளைமட்டும் கவனிக்கவேண்டியதே யொழிய நமக்கு வேறு அதிக வேலைகளெல்லாம் வைக்கமாட்டார்கள். ஒருக்கால் மாமியார் அம்மாள் வரும்பொழுது நாம் பெங்களூரிலிருந்து வரவழைத்திருக்கும் பழவர்க்கங்கள் வீணாப் அழுகிப்போகாமற் செலவாகும்பொருட்டு பரட்டைத்தலையும் அழுக்குப்படிந்த முகமுமுள்ள தனது பேரன் பேரத்திமுதலிய சிசுவர்க்கங்களை அழைத்துவந்தாலும் வருவார்கள். கடைசியாய் எல்லாவற்றிற்குங் கேடாய் எப்பொழுதும் கடுகடுவென்று காய்ந்துகொண்டாவது அல்லது ஒன்றுக்கும் வாய்திறவாத கௌரவமான மௌனம் பாராட்டிக்கொண்டாவதிருக்கும் நமது வேட்டகத்து மாமாவே வந்து தன்னை ஒரு பிரபுவாகவும் நம்மை ஒரு பையனாகவும் பாவித்துப் பேசிக்கொண்டு வெட்கமில்லாமல் குட்டி கலியாணியைத்தொட்டு நம்மெதிரிலேயே முத்தமிடுவர்.

அதையும் போனாற் போகட்டுமென்று பொறுத்துக்கொள்வோம். ஏனெனில் அவருடைய ஆஸ்திமுழுவதும் அவருக்குப் பிறகு, கலியாணிக்கே கொடுத்து விடுவதாகச் சொல்லிக்கொண்டிருக்கிறார். போகிறது! எப்படியும் நம்மனைவி பணக்காரியாகவாவது இருப்பள்: (அடுப்பில் விறகு கனிந்துகொண்டு சுகமாய் அனல்வீசிற்று) அப்படியானால் எப்பொழுதும் தான்கொண்டுவந்த ஆஸ்தியையேபற்றிப் பேசிக்கொண்டிருப்பள். ஏதாவது ஒரு அவசியமான செலவுக்குத் தன்கையிலிருந்து எப்பொழுதாவது ஒருதரம் பணம் கொடுத்துவிட்டால் பிறகு பேசும்போதெல்லாம் "அன்றைக்கு நல்லவேளையாய் அவசரத்துக்கு என்கையில் பணம் இருந்ததே" என்று மெதுவாய் ஞாபகப்படுத்துவள். செலவில் செட்டாயிருக்கவேண்டுமென்று நமக்கு புத்திசொல்லிவிட்டுத் தான் பனாரிஸ்பட்டுக்குக் குறைந்த புடவைகள் வாங்கமாட்டாள். கடைக்காரன் நம்மைப் பணம் கேட்கவரும்போது "இப்பொழுது கையிலில்லை அடுத்த சம்பளம்வந்து தான் தரவேண்டு"மென்று நாம் அவனெதிரில் அவனுக்கு உரக்கப்பதில் சொன்னாலும் தன்காதில் விழாததுபோல் ஒதுங்கிப்போய்விடுவள். ஆகக்கூடி நமதந்தஸ்துக்கு மேற்பட்ட பெண்ணைக் கலியாணம் செய்த பெரியமுட்டாளாக்கி அந்தகனமான குற்றத்திற்காக நம்மைத் துரும்பைபக்கரையான் அரிப்பதுபோலரித்து, துக்கம் வெட்கம் ஏக்கம் என்னும் தண்டனைகள் ரூபமாய் நம்மிடமிருந்து வட்டியும் முதலுமாய் அபராதம் வாங்கிவிடுவள்.

ஆனால் ஏழையாயிருந்தாலோ!—அப்பா! அதைக்காட்டிலும் எங்கேயாவது இரண்டு கஜம் கயிறுதிருடித் தூக்குப்போட்டுக்கொண்டு விடலாம். இதை நினைக்கவும் உடனே என்னுடம்பெல்லாம் ஒருகுளிரும் நடுக்கமுமுண்டாயிற்று. அடுப்பில் விறகைத்தூண்டினேன். அப்படியும் ஜ்வாலையிடவில்லை. மேலும் யோசிக்கலானேன்:—நாம் நெற்றி

வியர்வை நிலத்தில்விழ உடலை வருத்தி அன்றையன்றையச் சோற்றுக்கு சம்பாதிக்கும் பிச்சைக்காசெல்லாம் நமது (இருவருடைய) வரும்படி என்று கொண்டாட வந்துவிடுவள். ரவிக்கைத் துண்டுக்குப் பணம் வேண்டுமென்றும், புலாக்கு முத்துக்கெட்டுப்போய்விட்டதென்றும், அட்டிகைத்திருகு ஒடிந்துவிட்டதென்றும் சில்லரையாய் அரித்துவிடுவள். இந்த அற்பக்கடனைத் தொலைக்க நம்மிடத்தில் பணமிராது. போதாததற்குத் தம்பியிருந்தால் அவனை நம்வீட்டிற் கழைத்துவந்து வேஷ்டி புஸ்தகம் வாங்கிக்கொடுத்துப் பள்ளிக்கூடத்துக் கனுப்பவேண்டுமென்பள். "என்கையில் மட்டும் பணமிருந்தால் வீட்டை எப்படி வைத்திருப்பேன் தெரியுமா? இங்கே ரவிவர்மா படங்களும், அங்கே நிலைக்கண்ணாடிகளும், புடவைகள்வைக்கக் கண்ணாடி "பீரோ" வும், பால்சாப்பிட வெள்ளிக்கிண்ணங்களும்—இன்னும் எவ்வளவோ செய்வேன்" என்று சொல்லிக்காட்டுவள். நம்கையைப்பிடித்து ஒரு முத்தமிட்டு "என்கிட்டுவை அவனது அருமைக் கலியாணி தங்கள் பொது நன்மைக்காக ஒரு சொற்பத்தொகை கொடுக்கச் சொல்லிக் கேட்டால் அதற்கவனில்லை என்று சொல்வானா" என்று நயம்பேசுவள். "என்னருமைக்குழந்தைகள் தெய்வமேயென்று தாயில்லாப் பிள்ளைகள்போல் கந்தல்துணியைக் கட்டிக்கொண்டு தெருவில்நிற்க நான் பார்ப்பேனா" என்று கண்ணைக் கசக்கிக்கொள்வள். ஒருபேதைத் தாயின் வாஞ்சை திருப்தியாகுமளவும் குழந்தைகளுக்கு நகைபோட யாராலாகும்.

போகிறது அப்படி ஏழையில்லை யென்று வைத்துக்கொள்வோம். ஆனால் லக்ஷணம் மட்டும் எட்டேகால் லக்ஷணந்தான். அக்கினிபகவான் ஸ்நானம்பண்ணி வந்தாற்போலிருப்பள். கலியாணத்தின் போது அவ்வளவாகத் தெரியவில்லை: இப்பொழுது வரவர அவளிடத்தில்தான் அவலக்ஷணம் விருத்தியாய்க் கொண்டுவருகிறதோ, அல்லது நமக்குத்தான் கண்கள் முன்னிலும் துலங்கியிருக்கின்றனவோ தெரியவில்லை! பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்கிற கதையாய் ஒவ்வொரு விகாரமும் வெட்ட வெளிச்சமாய் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிகிறது. மூக்கின்பேரில் வண்டிச்சக்கரம்தான் ஓடிற்றோ என்று சந்தேகிக்கும்படி பள்ளம்விழுந்து கிடக்கும் அந்தசப்பைமூக்கையும், தேங்காய்க் கீற்றுகபாவித்துக் காக்கை கொத்திவிடப்போகிறதே என்று பயப்படக்கூடியதாயும் முன்பற்கள் உடைந்துபோனாலும் பாதகமில்லை பின்னால் நாங்கள் வார்ஸ்தார்கள் தயாராகவிருக்கிறோம் என்று தலையை நீட்டிக்கொண்டு மிருக்கும் அந்த ஏராளமான பல்வரிசைகளையும் கண்டு என்னமாகத்தான் மதிமயங்கிக் கலியாணம் பண்ணிக்கொண்டோமோ என்று இப்பொழுது நமக்கே ஆச்சரியமாயிருக்கிறது! இந்த லக்ஷணத்துக்கு யாராவது சாப்பிட வந்துவிட்டால் அன்றைக்கு அவசரமாய்த் தலைமயிரை அலங்கோலமாய் ஒற்றைக்கையால் சுற்றிக்கொண்டு பரிமாற வந்துவிடுவள். நாமும் "அடிகலியாணி, தலையை வாரிக்கொள்ளக் கூடாதா" என்று சொல்வதற்குக்கூடவாயில்லாமல் திருடனுக்குத் தேள் கொட்டினாற்போல் விழிக்கவேண்டும். கலியாணமாகிக் கொஞ்சநாள் வரையில் தினம் சுத்தமாய் ஸ்நானம் செய்துகொண்டும், புடவை ரவிக்கைகளை செவ்வையாய்த் துவைத்துக்கொண்டும் இருந்தாள். இப்பொழுது பழகிப்போகவிட்டு இந்தப் புருஷனுக்கு இவ்வளவு போதாதா என்று நாலுநாளைக்கொருதரம் குளித்துக்கொண்டும், ரவிக்கையின் கழுத்திலெல்லாம் தேன்மெழுகு தடவினதுபோலும் வைத்துக்கொண்டிருக்கிறாள்.

நாமும் சாப்பிட வந்திருக்கும் சிநேகிதனைப் பார்த்து "ஏனடா சீமா, நீ இன்னும் கலியாணம் பண்ணிக்கொள்ளவில்லையா?" என்று வெகு தைரியமாய்ப் பெருமை பேசிக்கொள்வோம்! (பண்ணிக்கொண்டவன் படுகிற அவஸ்தை அவனுக்கல்லவோ தெரியும்!)

நல்லது கல்யாணி நிரம்ப அழகாகவேயிருக்கட்டும். ஆனால் கொஞ்சம் வாயாடி. தாயார் செவ்வெண்ணையைக் கொஞ்சம் அதிகமாகப் புகட்டிவிட்டாள். பலமெல்லாம் தொண்டையிற் போய்ச் சேர்ந்துவிட்டது. (தூக்குப் போட்டாலும் கயிறு அறுமேயொழிய சாகமாட்டாள்.) மேலும் தாய் வீட்டில் செல்லமாய் வளர்ந்த பெண்ணாதலால் கொஞ்சம் முன்கோபமுண்டு—"என் காப்பிகுக் இப்படி ஜன்னி பிறந்துவிட்டது" என்று

கேட்டுவிட்டால் "அதற்கு யாரென்ன பண்ணுகிறது! விடிந்து 8 மணி வரையிற்றூங்கினால் அப்படித்தான் போகும்!" என்று கன்னத்திலடித்தாற்போல் உடனே பதில் சொல்வள். "என்னடீ குழம்பில் ஏகப்பட்ட மிளகாயை வாரிப்போட்டிருக்கிறாயே, எனக்குக் குழம்பு வேண்டாம்; இப்படி மிளகாயை அதிகமாய் செலவழிப்பதனால் தான் குடித்தனம் கட்டிவராமற் போகிறது" என்றால், "இங்கே ஒருவருக்கும் கட்டிவரவேண்டாம், கட்டி வந்தவர்கள் ஆஸ்பத்திரிக்குப் போகலாம்! உங்களோடு கூட சாப்பிட உட்கார்த்திவிட்டால் போதும், குழந்தைகளுக்கு சீக்கிரம் நல்ல வழக்கங்கள் படிந்து விடும்! நீங்கள் ஒருவர் குழம்பு வேண்டாமென்றால் எல்லா நமன்களும் ஒன்றைப்போல் சொல்லிக்கொடுத்தாற்போல் வேண்டாம் வேண்டாமென்கிறது" என்று குழந்தைகள் குற்றத்தையும் நம்மேற் சுமத்துவள். "ஏன் மோர் என்னவோ பச்சைப்பால் வாசனை வருகிறது" என்று கேட்டால், "ராத்திரி சற்றுத் தூங்கிவிட்டேன். கொஞ்சம் நேரம் கழித்து மோர் குத்தினேன். அதற்காக இப்படி அமர்க்களப் படுத்தவேண்டாம்! நன்றாயிருக்கிறது! ஊர் கூடிவிடப்போகிறது!" என்று தானே இரைச்சல் போடுவள்.

ஆகக்கூடி கட்டின பசுப்போல் குனிந்த தலை நிமிராமலும் வாய்பேசாமலும் இலையிலுட்கார்ந்து வெந்ததும் வேகாததுமாய் விரல் கொப்பளிக்க அவள் போடும் குழம்பும் ரஸமுமாகச் சோற்றை வாரி வாரிப் போட்டுக்கொண்டு எழுந்தாற் போதுமென்று கையலம்பி விட்டு சட்டையும் தலைப்பாகையுமாகக் கையில் தூக்கிக்கொண்டு வீட்டுக் கதவைத் தாண்டித் தெருவில் வந்து ஒரு பெருமூச்சுவிட்டு பிறகுதான் முகத்தில் ஒரு தெம்பும் புத்திக்கொரு தெளிவும் நாமும் மற்றவர்களுக்கு சமானமான ஒரு புருஷன் தான் என்கிற மனோ தைரியமும் நமக்குண்டாகும் என்று நினைந்தேன்.

உடனே வந்த சிரிப்பை யடக்கமாட்டால் "ஹஹ்ஹஹ,ஹா! இன்னும் கடவுள் நம்மை அந்தஸ்திதிக்குக் கொண்டு வந்துவிட வில்லையப்பா" என்று இரைந்து சிரித்ததில், கொஞ்சம் கண்ணயர்ந்திருந்த எனது நாய் திடுக்கிட்டெழுந்து நெற்றியைச்சுளுக்கிக் காதை முன் நீட்டித் தலையைச் சாய்த்து,என்ன சமாசாரம் என்று கேட்பதுபோல் என் முகத்தைக் குறிப்பாய் ஏறிட்டுப்பார்த்து என் புன்னகையைக் கண்டு ஒன்றும் அபாயம் வந்து விடவில்லை என்றறிந்துகொண்டு வாலையாட்டி மறுபடியும் உடலைப் பந்துபோற் சுருட்டிக்கொண்டு மூலையிற் படுத்துவிட்டது. மேல் யோசித்தேன்:—

வேண்டாமையா—இப்படியெல்லா மிராமல் பணக்காரியாகவும் லக்ஷணமாகவும் சாந்தமாகவுமிருப்பதாக வைத்துக்கொள்வோம்!—ஆனால் நம்மிடத்தில் ஒரு விசேஷ அபிமானமாவது லக்ஷியமாவது கிடையாது. நாம் எக்கேடு கெட்டுப்போனாலும் கவனியாள்.—

எப்பொழுதும் அவளுடைய காரியமுண்டு அவளுண்டு என்று இருப்பாள். ஏதோ தகப்பனார் தாத்தா எல்லாருமாகச் சேர்ந்து இந்த வரன்தான் மனதிற் கிசைந்ததாயும் ஜாதகம் பொருந்தினதாயும் நம்மந்தஸ்துக்கு ஏற்றதாயுமிருக்கிறதென்று சொன்னதினால் அவர்கள் மனதிற்கு வருத்தம் வராமலிருக்கும்பொருட்டு நம்மை மணந்தாள். மேலும் நம்மிடத்தில் பிரியமில்லை என்பதுபோலவே வெறுப்புமில்லை! ஏதோ பாதகமில்லை, கூடிய மட்டும் யோக்கியன்தான் என்று தயாதாக்ஷிண்யமாக விவாகம் செய்து கொண்டதாக நம்மிடத்தில் நேரிலேயே எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறாள்!—நாம் ஏதாவது படிக்க ஆரம்பித்தால் "என்ன எப்போ பார்த்தாலும் கம்ப ராமாயணமும் திருவாசகமும் படித்துக்கொண்டு தலைவேதனை!—பாக சாஸ்திரம் என்று ஒரு புஸ்தகமிருக்கிறதாம் அதைப் படித்தாலும் நான் தீட்டாய்ப் போனால் சமைத்துப்போட உதவும் என்பள். தலைச்சன் குழந்தை பெண்ணாய்ப்பிறந்து விட்டால் "என்னவோ யார் இருக்கிறது என்ன நிச்சயம்; யார் முன்னே செத்தாலும் பின்னே செத்தாலும் குழந்தையைத் திண்டாட விடாமல் ஆஸ்தியை அதன் பேருக்கு எழுதி வைத்து விடவேண்டு" மென்பள்.

"அதோ அடுத்த வீட்டில் கிருஷ்ணமூர்த்தி அய்யர் இருக்கிறாரே, அவர் உங்களைப் போல் பிசுபிசென்று அழுக்கு வேஷ்டியைக் கட்டிக்கொண்டு கந்தல் அங்கவஸ்திரத்தை

டேல் போட்டுக்கொண்டு வெளியே கிளம்புகிறார்?—அவர் சட்டை என்ன அவர் மல்லென்ன, அவர் சரிகை அங்கவஸ்திரமென்ன அவர் சாந்துப்பொட்டென்ன அவர் வைரக் கடுக்கனென்ன—அவரைப் பார்த்தாவது நீங்கள் நாலு பேருக்குக் கொஞ்சம் கௌரவமாயிருக்கும்படி உடுத்திக்கொள்ளவேண்டாமா?" என்று வருந்துவள். "கச்சேரியிலிருந்து தாங்கள் எனக்காக அவசரப்பட்டுக்கொண்டு சீக்கிரம் வரவேண்டியதில்லை. இத்தனை பெரிய தெருவில் பயமென்ன? எனக்குப் பயமேயில்லை" என்று தைரியம் பேசுவள். அடி கலியாணி நான் உனக்கு நல்ல கதைப் புஸ்தகம் ஒன்று வாங்கி வந்திருக்கிறேன். படிக்கிறேன் கேள்" என்று படிக்கும்போதோ, நல்ல ஸ்வாரஸ்யமான இடம் வரும்போது "வாசலில் கத்தரிக்காய்க்காரி கூப்பிடுகிறாள் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று எழுந்துவிடுவள். கதாநாயகர்கள் இருவருக்கும் விவாகமாகி சௌக்கியமாயிருந்தார்கள் என்று கதையை முடித்தால் உடனே ஒரு பெருமூச்சு விட்டு "கிருஷ்ணமூர்த்தி அய்யர் ஊரிலில்லையோ" என்பள். "எப்போ பார்த்தாலும் கதவைச்சாத்திக்கொண்டு வீட்டிலேயே அவியவேண்டுமென்றால் எப்படி முடியும். எனக்கு ஏதாவது நாலு வீட்டுக்குப் போய் வந்து பேசிக்கொண்டிருந்தால் தான் பொழுதுபோகும். அடுத்தகத்துப் பெண்களெல்லாம் திருவேந்திபுரத்து உற்சவத்துக்குப் போகிறார்கள். என்னை யார் எந்த உற்சவத்திக்குப்போ என்று சொல்கிறார்கள்" என்று முகத்தைச் சுளுக்கிக்கொள்ளுவள்.

கடைசியாக, இப்படியெல்லாமிராமல் பிரியமாகவே யிருப்பதாக வைத்துக்கொள்வோம். முகமும் அவ்வளவு கெடுதலல்ல: நெற்றிமட்டும் கொஞ்சம் அதிக விசாலமாயும் உடம்புக்குத் தலை கொஞ்சம் பெரிதாகவுமிருக்கும். கூடிய மட்டும் தேக வஸ்திரங்களை சுத்தமாய் வைத்துக்கொள்வள். ஆனால் கட்டைவிரலிலும் ஆள்காட்டி விரலிலும் எப்பொழுதும் கொஞ்சம் மை படிந்திருக்கும். ஏனெனில் எப்பொழுதும் படிப்பதும் எழுதுவதுமே தொழிலாயிருப்பாள். கலியாணத்தின் போது அவள் நீதிமஞ்சரியிலிருந்து பாட்டுக்கள் தாராளமாய் ஒப்புவித்ததைக்கேட்டு நாம் அவளுக்கு நல்ல முதல்தரமான ஞாபக சக்தி யிருக்கிறதென்று மட்டும் சந்தோஷித்தோமேயொழிய இப்படியெல்லாம் புஸ்தகப் பைத்தியமும் நூலினுற் பூப்போடுகிற பைத்தியமும் பிடித்து வீட்டு வேலைகளைச் சற்றும் கவனியாமற் றிரிவளென்று நாம் கனவிலும் நினைக்கவில்லை. எல்லாம் போகப்போக வயதானால் தானே புத்தி வந்து விடும் என்று நினைந்திருந்தோம் அப்படிக்கில்லாமல் எப்போதும் அர்ச்சுனனையும் திரௌபதியையும், கிருஷ்ணனையும் பற்றிக் காதுகொப்பளிக்கப் பிதற்றுவதென்றால் யார்தான் சகிப்பார்கள். நாம் ஏதாவது ஒழிந்த வேளையிற் படிக்கலாமென்று வைத்திருக்கும் கம்பராமாயணத்தைக் கூட நமக்குப் படிக்க சாவகாசமில்லாதிருக்க, அதை அவள் எடுத்தெடுத்து அடியிலெல்லாம் கட்டை விரல் வைத்து அழுக்குப்பட்டுக்கிழிந்து கிடக்கிறது. இவள் படிக்கிற இரைச்சலில் நமக்கு தூக்கம் கெட்டுப்போய் ஒற்றைத் தலைவலி வந்து விட்டதென்று சாம்பிராணித் தைலம் வைத்திருக்கும் ஸீஸாவைக்கொண்டுவரச்சொன்னால் மறந்துபோய்க் கையிலிருக்கும் மைக்கூட்டைக் கொண்டுவந்து நிற்பள். வீட்டில் நமது தாயார் சமைப்பள். நாம் அழுகிற குழந்தையை மார்பில் போட்டுத் தூங்கப் பண்ணிக்கொண்டிருப்போம்—அப்பொழுது தான் கலியாணி விழுந்து விழுந்து "அல்லியரசாணிமாலை" படித்துக்கொண்டிருப்பள்!—என்று யோசித்தேன்.

அடுப்பு கண்ணையவிக்கும்போற் புகையஆரம்பித்தது. கலியாணியையும் குழந்தையையும் சமையல் செய்கிற தாயாரையும் நினைத்தவுடன் என்னையறியாமல் என் கை அடுப்பிலிருக்கும் விறகைத் தூண்டிற்று—உடனே புகையெல்லாம் சிவக்க ஓர் ஜ்வாலை கிளம்பி ஒரு மெல்லிய குச்சியிற் பிடித்து, வெண்ணுந்தைப் பாம்பு ஆட்டின் உடலைச் சுற்றிக்கொண்டு மளமளவென்று முறிப்பதுபோல் ஒரு பெரிய சவுக்குக்கட்டையைச் சுற்றி அதன் கணுக்கள் பட படவென்று வெடிக்க உபரக்கிளம்பி அறை முழுதும் ஒளி வீசிற்று. புகையுடன் சந்தேகங்கள் நீங்கி ஒளியுடன் தைரியமும் பிறந்தது.

(இன்னும் வரும்.) ஓர் நித்தியபிரமசாரி.

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

(அதிகாரம்—2.)

மறுநாள் காலையில் முத்துவய்யர் மகாதேவய்யர் வீட்டிற்குவந்து கொடுத்தரூபாயை திருப்பிக் கொடுக்கும்படி கேட்டார். மகாதேவய்யர் உள்ளேபோய்பெட்டியைத் திறந்து பார்த்தார். பெட்டியில் பணத்தைக்காணோம். உடனே மகாதேவய்யர் திகிலடைந்து ஐய்யோ அண்ணா அண்ணா என்று வெகு அவசரமாக காமேசுவரய்யரைக் கூப்பிட்டார். உள்ளே ஜபம் செய்துகொண்டிருந்த காமேசுவரய்யர் ஓடிவந்து என்னவென்றார். முத்துவய்யரும் அவர் கூடவே ஓடிவந்தார். மகாதேவய்யர் அய்யோ அண்ணா பணத்தைக்காணோமே நாமென்ன செய்கிறது என்றார். இதற்குள் பக்கத்துவீட்டு ஜனங்களெல்லோரும் ஓடிவந்து "என்ன? யாருக்கு என்ன உடம்பு? என்ன சமாச்சாரம்?" என்றார்கள். பணம் போய்விட்டதென்று சொல்லவும் ஒருவர் எங்கேயாவது கன்னம் வைத்து திருடன் வந்திருக்கிறானா பாருங்களென்றார். வேறு ஒருவர் திருடனாவது வரவாவது உள்ளாளில்லாமல் திருடன் வருவானாவென்றார். மற்ற ஒருவர் உங்கள் உள்ளுக்கு யார் அடிக்கடி வருகிற வழக்கமென்றார். மகாதேவய்யர் காமேசுவரய்யர் இவர்களுக்கு ஒன்றும் யோஜனை ஓடவில்லை. மகாதேவய்யருக்கு சந்தேகமெல்லாம் சேதுவய்யர்மீது வற்பட்டது: ஏனென்றால் அவர் தான் திறவுகோல் வைத்த இடத்தை 2, 3 தரம் குறிப்பாகப் பார்த்தார். முதல் நாள் பழம் சர்க்கரை வழங்கும் போதுகூட இவர் சற்று இருந்து விட்டு வெளியே போய்விட்டார். பிறகு அவரைக் காணோம். இப்படி யோஜித்துக்கொண்டிருக்கும்போதே சேதுவய்யரும் வந்து சேர்ந்தார். வந்தவர் என்ன சங்கதியென்று கேழ்க்க ஒருவர் ஏதோ ரூபா திருட்டுப் போய்விட்டதாமென்று சொல்லவும், திருட்டு என்றதை கேட்ட சேதுவய்யர் வீட்டிற்குள் சுருட்டு கொண்டுவந்தவனாரென்றார். பிறகு ஒருவன் இதென்ன சனியன் கூத்தில் கோமாளியை விட்டதுபோலிருக்கிறது! இந்த சொதுடுக்கு யார் சொல்லுகிறது! "மாமா, பணத்தை காணோமாம் பெட்டியில்" என்றார். சேதுவய்யருக்கு அதுவும் காதில் படாமல் "செட்டி இங்கே வந்தானா, எப்போ வந்தான்?" என்றார். பிறகு ஒருவன் பலமாக அவருக்கு சங்கதியைச் சொல்ல அவர் ஒன்றும் யோஜிக்காமல் இங்கே உள்ளே யார் திருடர் வரக்கூடும் என்றார். மகாதேவய்யர், யாரோ திருடன் தான் வந்து பணத்தைக் கொண்டுபோய் விட்டானே என்று பலமாய் சொன்னார். சேதுவய்யர் உடனே, இதெல்லாம் என்னவேஷம் திருடனாவது வரவாவது, முத்து புத்தியாய் பிழை. உன் பணத்தை மோசஞ்செய்ய ஏதோ யோஜனை நடந்திருக்கிறது: அதற்காகத்தான் இவர்கள் இவ்வளவு வேஷம் போடுகிறார்களென்றார். உடனே முத்துவய்யர் வெகு கோபமாய் எழுந்திருந்து மகாதேவா என் ரூபாயை கீழே வைத்துவிடு இல்லாவிட்டால் நான் உன்னை விடமாட்டேன், நானும் சாப்பாட்டுக்குக்கூட போகமாட்டேன் உன்னையும் சாப்பாட்டுக்குக்கூட விடமாட்டேன் என்றார். மகாதேவய்யர் என்ன முத்துமாமா, கடன் கொடுத்தவர்கள்கூட இப்படி கண்டிக்கமாட்டார்களே. நீங்கள் வைத்துக் கெட்டுப்போனால் அப்பொழுது யாரைக் கேழ்ப்பீர்கள். நீங்கள் என்னை இப்படிக் கண்டிப்பது நியாயமல்லவென்றார். சேதுவய்யர், "முத்து நான் சொல்லவில்லையா! பேச்சு எப்படி வருகிறது பார்" என்றார். உடனே முத்துவய்யர் அதிகமாகக் கோபித்து என்ன மகாதேவா இப்படி ஜவாபு சொல்லலாமென்று எத்தனை நாள் யோஜித்திருந்தாய்! இதெல்லாம் என்னிடத்தில் நடக்காது. பணத்தை கீழே வைத்துவிட்டு மறுகாரியம் பார் என்றார். காமேசுவரய்யர் கோபித்து, என்ன சேது யோக்கியதை வெகு நன்றாயிருக்கிறது. பணம் திருட்டுப்போனால் அதற்கு யாரென்ன செய்வார்கள் என்றார். சேதுவய்யர் காமேசுவரய்யரைப்பார்த்து ஓய் இந்த தந்திரமெல்லாம் என்னிடத்தில் நடக்காது. பணமாவது திருட்டுப்போகவாவது. இந்த வேஷமெல்லாம் யாரிடத்தில் போடுகிறீர் என்றார். மகாதேவய்யருக்கு இதையெல்லாம் பார்க்க சேதுவய்யர்மீது சந்தேகம் அதிகரித்தது.

காமேசுவரய்யர் மறுபடியும் கோபித்துக் கொண்டு, சேது, நீங்களெல்லாம் இப்படி பேசுவது சரியல்ல. பணம் பெரிதல்ல. மனுஷ்யாளைப்பார்த்து பேசவேண்டும். நேற்று பணம் கொடுக்கும்போது நீங்கள் காண்பித்த பிரியமென்ன. இப்போது நீங்கள் பேசுகிற கண்டிப்பென்ன. உங்களை பணம் கொடுக்கச்சொல்லி நாங்கள் கேட்டோமா என்றார். உடனே சேதுவய்யர் முத்துவய்யரைப் பார்த்து, முத்து நாம்போகலாம்வா, இவர்கள் இப்படி கொடுக்கமாட்டார்கள். இனிமேல் நம்மாலானதைப் பார்க்கவேண்டுமென்று முத்துவய்யரை வெளியே கூட்டிக்கொண்டு போனார். உடனே கூட்டமும் கலைந்துபோய் விட்டது. காமேசுவரய்யரும் மகாதேவய்யரும் தனிமையாயிருந்தார்கள்.

காமேசுவரய்யர், "மகாதேவா, சேதுவும் முத்துவும் கிராதகர்களே, இவர்களிடத்தில் நாம் அகப்பட்டுக்கொண்டு தப்பமுடியுமா. நம்மிடம் பணத்தை வசூல் செய்யாமல் விடமாட்டார்களே என்ன செய்கிறது" என்றார். மகாதேவய்யர் "அண்ணு இதில் ஏதோ அவர்களாலேயே மோசம் நடந்திருக்கிறது. சேதுவய்யனை நாம் நம்பக்கூடாது" என்றார். காமேசுவரய்யர் "சேது ஓர் பெரிய திருடனுச்சுகே. அவனுக்கு நீ பணம் வைத்த இடம் தெரியுமோ" என்றார். மகாதேவய்யர் தெரியுமென்றார். காமேசுவரய்யர் அப்படியானால் பணத்தைசேதுதான் எடுத்திருப்பான். அவன் வெகுநாளாய் திருட்டில் கைதேர்ந்தவன். அவன் சம்பாதித்த சொத்தெல்லாம் திருட்டு சொத்தேதவிற வேறல்ல. சேது பணக்காரனைவிபரம் உனக்கு தெரியாது. காசிக்குப் போகிற வழியில் சமயபுரம் மங்களூர் என்று இரண்டு ஊர்களுண்டு. அந்த ஊர்களுக்கு நடுவே, பாலைவனமே தவிர செழிப்பான இடமே கிடையாது. திருடர் பயமும் அதிகம். அஸ்தமித்தால் அந்த வழியில் ஒருவரும் போகமாட்டார்கள். இந்த இரண்டு ஊர்களுக்கும் நடுவில் சேதுவும், முத்துவும், ஓர் மடம் கட்டிக்கொண்டு, சேது ஓர் பெரிய ரிஷிபோலும் முத்து சிஷ்யன்போலும் வேஷம் போட்டுக்கொண்டு வந்தார்கள். சேது கண்மூடினது மூடினபடியே இருப்பான். முத்து அந்த வழியில் வந்து மடத்தில தங்கினவர்களுக்கெல்லாம் ரிஷியின் விபூதி கொடுப்பான். அஸ்தமித்தவுடன் ஸ்திரீகளையெல்லாம் பயமுறுத்தி, அவர்கள் நகைகளெல்லாம் தன்னிடமிருந்தால்தான் ரிஷிக்கு பயந்துகொண்டு திருடன் எடுக்கமாட்டானென்று போதிப்பான். தினந்தோறும் ஸ்திரீகள் இவ்வார்த்தையைக் கேட்டுக்கொண்டு நகைகளையெல்லாம் கழட்டிக் கொடுப்பார்கள். மறுநாள், ஸ்திரீகள் கொடுத்த நகையைக் கேட்டால், நகை யார் வாங்கினார்களென்று சொல்லி அவர்களை அடித்துத் துறத்திவிடுவான். இப்படி வெகுகாலம் நடந்து சேதுவும் முத்துவும் பணம் ஏராளமாய் சம்பாதித்து விட்டார்கள். கடைசியில் ஒரு நாள் சாயங்காலம் ஓர் தாசி மடத்தருகில் வந்தாள். அதற்கு முதல்நாள் தன் நகைகளைக் கொடுத்து ஏமாந்துபோன ஓர் பெண் அந்த தாசியைக் கண்டு ரிஷியின் மோசங்களையெல்லாம் சொன்னாள். தாசி அவளுக்கு இரக்கப்பட்டு தன் எதிரில் கேழ்க்கும்படி சொன்னாள். உடனே அப்பெண் மறுபடியும் போய் முத்துவை நகைகளைக் கொடுக்கும்படி கேட்டாள். அவள் கேட்டுக்கொண்டிருக்கும்போதே, தாசி முத்துவய்யரிடம் வந்து, அய்யா வழியில் திருடர் பயமென்கிறார்களே. நான் ஏராளமாய் நகை போட்டுக்கொண்டிருக்கிறேனே இதுகளையெல்லாம் நான் தங்களிடத்தில் கொடுத்தால், நாளையதினம் என்னிடம் ஜாக்ரதையாகக்கொடுப்பீர்களா என்றாள். முன் வந்த பெண், என் நகைகளை கொடுங்களய்யா என்றாள். முத்துவய்யர் இப்பெண் தாசியிடம் ஏதாவது சொல்லி அவள் நகையைக் கொடாமல் செய்துவிடப் போகிறாளென்று பயந்து அப்பெண்ணின் நகைகளையெல்லாம் கொடுத்துவிட்டார். உடனே தாசி அப்பெண்ணைப் பார்த்து அம்மா நீ எங்கே போகப் போகிறாயென்றாள். அப்பெண் மங்களூர் என்று சொல்லவும் தாசி ஆனால் நானும் வருகிறேனம்மா என்று சொல்லி முத்துவய்யரைப் பார்த்து சுவாமி துணைசேர்ந்துவிட்டது நான் போய்வருகிறேனென்று ஏமாற்றிப் போய்விட்டாள், முத்துவய்யருக்கு வெகு விசனம். பிறகு அந்த தாசி எங்கேபார்த்தாலும், இவர்களுடைய கெட்ட நடத்தையை பிரசுரம் செய்துவிட்டாள். இது தெரிந்த முத்துவய்யர் சேதுவய்யர்மடத்தை ஒருவ

ருக்கு ரகசியமாக விற்றுவிட்டு எங்கேயோ ஓடிப்போய்விட்டார்கள். பிறகு வெகுநாள் திருட்டு நகைகளை ஒளித்துவைத்திருந்து, பிறகு விற்று சொத்து சேர்த்துக்கொண்டார்கள். சேதுவுக்கு திருட்டுத்தான் தொழில். அவன் 'சொகுடு' என்று சொல்வதெல்லாம் வேஷம். எங்கேயாவது திருடுகிறவன் சொகுடாயிருப்பானா. சேதுவை நீ மெள்ள வைது பார். அது உடனே அவன் காதில்படும். அவனுக்கு கொடுக்கவேண்டிய பணத்தைப் பற்றி பேசு. அதுவும் உடனே காதில்படும். ஆனால் அவனால் உனக்கு ஏதாவது வரவேண்டியதைக் கேள். அதுமட்டும் ஒருபோதும் காதில் படாது. இதை சொகுடென்று சொல்லலாமா என்றார். மகாதேவய்யர் அண்ணா நேற்றுமுழுவதும் சேது இங்கே வரவில்லை. மூன்றாம்நாள் வெகுநேரம் நமது பழய காவல்காரன் முத்துக்கருப்பனோடு பேசிக்கொண்டிருந்தான். அந்தப்பயலை நான் தள்ளினது நமக்கு அனர்த்தத்தில் வந்துவிட்டது. இவர்கள் இருவருந்தான் சேர்ந்து செய்திருக்கவேண்டுமென்றார். இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், சேதுவய்யர், முத்துவய்யர், போக்கிரிக்கிருஷ்ணசாமி அய்யன் மூன்றுபேரும் வந்தார்கள்.

கிருஷ்ணசாமி அய்யனுக்கு அந்த ஊரில் போக்கிரிக் கிருஷ்ணசாமி அய்யனென்று பெயர். அவனுக்கு தினந்தோறும் பொய்க்கேசு உற்பத்திசெய்வதும் கிராமத்தில் ஒருவருக்கொருவர் சண்டைமூட்டி விடுவதும், வியாஜ்யத்துக்குப் போகும்படி கலகப்பட்டவர்களைத் தூண்டிவிட்டு கோர்ட்டுக்கு கூட்டிக்கொண்டுபோய் அவர்களுக்கு வக்கீல் வைத்துக்கொடுப்பதும், எந்தக்கக்ஷியில் பணம் அதிகமாக கொடுக்கிறார்களோ அவர்கள் பக்ஷம் பொய்சாக்ஷி சொல்வதுந்தான் விசேஷத்தொழில். அவனுக்கு வேறே ஐவேஜி இல்லை. அன்றாடகம் அக்ரமம் செய்து காலக்ஷேபம் செய்துவருகிறபடியால், அவனுக்கு போக்கிரிக் கிருஷ்ணசாமி அய்யனென்று பெயர் ஏற்பட்டது. அவனைக்கண்டால் அந்தஊரில் அனேகருக்கு பயம். ஏதாவது!கோர்ட்டுக்கு இழுத்துவிட்டால், 10, 5 செலவாகுமேயென்று எல்லோரும் அவனை சினேகம் செய்துகொள்வார்கள். வக்கீல்களைக் கண்டால் வெகு வணக்கத்துடன் அவர்களிடம் ரகசியமாக சட்டவிஷயமான சங்கதிகளைக் கேட்டுக்கொண்டு, கக்ஷிக்காரர்களிடம் வக்கீல்களைக்காணாமல், வக்கீல்களுக்கு என்னதெரியுமென்று சொல்லி தூஷித்து, தான் எல்லா ஓத்தாசையும் செய்வதாக அவர்களுக்கு சொல்லி ஏமாற்றி அவர்களிடம் பணத்தைப் பறிப்பதும் வழக்கம். சன்ன ருத்ராக்ஷங்கள் கோர்க்கப்பட்ட ஜபமாலை ஒன்று இவன் கழுத்தில் தொங்கும். இவன் போகும்போதே அந்த ருத்ராக்ஷம் ஆடுவது அய்யோ இவன்கழுத்திலேயா நானிருப்பது நான் ஓடிப்போகிறேன் என்று துள்ளிக்குதிப்பதுபோலும், இவன் சொல்வதை நம்பாதே நம்பாதே, என்று தலையை அசைப்பதுபோலும் தோன்றும். நெற்றியில் இவன் போட்டிருக்கும் பெரிய குங்குமப் பொட்டானது, என்னிடம் வருபவர்களுக்கெல்லாம் ஸைபர்மிச்சமென்று காட்டக்கூடியதாயிருந்தது. தலையில் தேங்காய்க் குடுமிபோல ஓர் உச்சுக்குடுமிதானிருந்தது. தான் செய்த பாபங்களுக்கெல்லாம் செலவில்லாத பரிகாரம் போல், இவன் சில சமயங்களில் கோவில்களைச் சேர்ந்த நந்தவனங்களுக்கெல்லாம் தண்ணீர் இறைத்துக்கொண்டும் வந்தான். அதைப் புதிதாய்ப் பார்ப்பவர்கள் இவர் ஓர் பக்தனோ என்று சந்தேகப்படுவார்கள். இது போதாமல் அந்த ஊர் சுவாமி கிராமப்ரதக்ஷிணம் புறப்பட்டால், முன் பக்கத்தில் வாகனத்தைத் தூக்க இவன் தயாராயிருப்பான். இப்படிச் செய்வதெல்லாம் தன்னுடைய பாபங்களுக்குப் பரிகாரமென்றும், ஆகையால் தான் என்னபாவம் வேண்டுமானாலும் செய்யலாமென்றும், அதற்குப் பிறகு செலவில்லாத இப்பரிகாரங்களைச் செய்துவிடலாமென்றும் அவனுடைய எண்ணம். இப்படிப்பட்ட போக்கிரிக் கிருஷ்ணசாமி அய்யனை கூட்டிக்கொண்டு சேதுவய்யரும் முத்துவய்யரும் உள்ளே நுழைந்தவுடனே கிருஷ்ணசாமி அய்யன் மகாதேவய்யரைப் பார்த்து என்ன அண்ணா பணத்தைக் கொடுத்துவிட வேண்டியதுதானே. பணம் கெட்டுப்போனது அவர்களுடைய பிசகல்லவே என்றான். மகாதேவய்யர் "கிருஷ்ணசாமி நான் ஈசுவரசாக்ஷியாய் இந்தப்பணத்தை தொட்டதுகூட இல்லை. நான் ஏதோ பணத்தை மோசம்செய்ய யோஜித்திருப்பதுபோல் சேதுமாமா பேசுகிறார்.

நான் எடுத்திருந்தால் கொடுக்கவேண்டுமே யல்லாது நான் எடுக்காவிட்டால் ஏன் கொடுக்கவேண்டு" மென்றார். கிருஷ்ணசாமி அய்யன் அண்ணா காலத்தைப்பார்த்து நடந்து கொள்ளவேண்டும். தங்களுக்குத்தெரியாததது இல்லையென்று சொல்லி காமேசுவரய்யர் காதின்பக்கத்தில் தன் முகத்தைவைத்து ரகசியமாக, சேதுவய்யன் இப்போதே போலீசாரைப்போய் கூட்டிவருவதாகச் சொன்னான். நான் வேண்டாமென்று சொல்லி தடுத்து அவனை இங்கே கூட்டிவந்தேனென்றான். போலீஸ் என்று சொல்லவும் காமேசுவரய்யருக்கு உடம்பெல்லாம் நடுக்கமெடுத்தது. பிறகு கிருஷ்ணசாமி அய்யன் அவர்கள் இருவரையும் தனியாகக் கூட்டிப்போய், காமேசுவரய்யரைப்பார்த்து அண்ணா நான் சொல்வதைக்கேளுங்கள்: இந்த சமயத்தில் நீங்கள் முரட்டுத்தனம் செய்தால் உங்களுக்கு தலைக்குக்கல் விலைக்குவாங்கினதுபோலாகும். இது பெரியகுற்றம். சர்க்காரில் தெரிந்தால் நீங்களிருவரும் ஜெயிலுக்குப்போவது நிச்சயம். அப்படி விடக்கூடாதென்றுதான் நான் சேதுவய்யரை வெளியேவிடாமல் இங்கே கூட்டிவந்தேன். சேதுவய்யன் மகாபோக்கிரியே, உங்களுக்குத் தெரியாதா. அவனுக்கு ஈவு இரக்கம் என்பதே கிடையாதே. நான் என்னால் கூடியவரையில் அவனுக்கு நல்ல வார்த்தை சொன்னேன். பணம் கெட்டுப்போனால் அதற்கு மகாதேவய்யர் என்னசெய்வார். அவர் உன்னைக் கொடுக்கச்சொல்லி பிரார்த்தித்தாரா. நீங்கள் உங்கள் பெட்டியில் வைத்திருந்து கெட்டுப்போனால் என்னசெய்வீர்கள். ஒரு பாவமுமறியாத அவரிடத்தில் நீங்கள் தண்டம்பிடிக்கப் பார்ப்பது சரியல்லவென்று எவ்வளவோ நியாயமெல்லாம் சொல்லிப்பார்த்தேன். அவன் ஒரே பிடிவாதமாய், கொடுத்தாலாச்சுது இல்லாவிட்டால் ஆனது ஆகட்டும் நான் பிராதுகொடுத்து விடுகிறேனென்று சொல்லுகிறான். நாசமாப்போகிறான். நீங்கள் அவன்பணத்தை எறிந்துவிடுங்கள். அந்த அயோக்யப்பயலுடைய சகவாசம், நீங்கள் வைத்துக்கொண்டது பிசகு என்றான். மகாதேவய்யர் "கிருஷ்ணசாமி எப்படியாவது அவர்களுக்குச் சொல்லி பாதியாவது வாங்கிக்கொண்டு போகச்சொல்லு அப்படியாவது தொலைத்துவிடுகிறேன்" மென்றார். கிருஷ்ணசாமி அய்யன் அண்ணா உங்களுக்கு ஏன் இது வீண்சபலம். அந்தப்பயலாகேட்கப் போகிறான். நான் அப்படியும் சொல்லிப் பார்த்தேனே! நல்லது உங்கள் முன்னால் மறுபடியும் கேட்டுப்பார்க்கிறேன் வாருங்களென்று மறுபடியும் அவர்களிடம் கூட்டிப்போய் கிருஷ்ணசாமி அய்யன் சேதுவய்யரைப் பார்த்து, சேதுவய்யரவாளே பணம் திருட்டுப் போய் விட்டதென்பதில் சந்தேகமே இல்லை. அதற்காக மகாதேவய்யர் பூராத் தொகையையும் கொடுக்க சாத்யப்படுமா? அவர் என்ன செய்வார்! அவரை ஏமாற்றி யாரோ கொண்டுபோய் விட்டான். கிடக்கிறது! அவருடைய அஜாக்ரதைக்காக பாதிதொகை அவரிடம் வாங்கிக்கொள்ளுங்களென்றான்.

சேதுவய்யர்.—கிருஷ்ணசாமி உன்னை இந்த மத்யஸ்தத்துக்குத் தான் கூட்டிவந்தேனே. எனக்கு இந்தக்கோளாறெல்லாம் முன்னமேயே தெரியுமே. பணம் திருட்டுப்போய் விட்டதென்று சொன்னால் பாதிதுகையாவது தள்ளுவார்கள். 500 ரூபாயாவது நாம் மிச்சம் பிடித்துக்கொள்ளலாமென்றுதானே இந்த யோஜனை நடந்திருக்கிறது. எனக்குத் தெரியாதா.

மகாதேவய்யர்.—சேதுமாமா. இந்த ஊர் பெருமாளறிய அந்தப்பணத்தை நாங்கள் ஒருவரும் எடுக்கவில்லை. இதைப்பார்க்க நான்வேறு என்ன சொல்லட்டும்.

முத்துவய்யர்.—மகாதேவா, நீ எடுத்தாலென்ன எடுக்காவிட்டாலென்ன. அதை நான் கவனிக்கவேண்டிய அவசியமில்லை. என் பணத்தை கொடுப்பாயா மாட்டாயா? உண்டு இல்லையென்று சொல்லிவிடு.

மகாதேவய்யர்.—நான் மனதாரக் கொடுக்க மாட்டேன். வேணுமானால் கோவிலில் வைத்துவிடுகிறேன். நீர் ஸ்நானம்செய்து ஈரவேஷ்டியுடனே செவ்வரளிப்பூமாலை போட்டுக்கொண்டு நான் ஸ்வாமி சந்நதியில்வைக்கும் நெய்விளக்கை சத்யம்செய்து அணைத்து பணத்தை எடுத்துக்கொள்ளும்.

முத்துவய்யர்.—அப்படியே எடுத்துக்கொள்ளுகிறேனப்பா. என்பணத்தை எனக்கு எடுத்துக்கொள்ள சந்தேகமென்ன. நீ கோவிலிலேயே வைத்துவிடு.

கிருஷ்ணசாமி அய்யன்.—முத்துவய்யரே நான் சொல்வதைக்கேளும். பணத்தைக் காணலாம். மனுஷ்யாளைக் காணுவது அரிது. பணம் நாம் செத்தால் நமது கூடவராது, சத்யம் பண்ணி எடுத்துக்கொள்வது நன்றாயில்லை. 500 ரூபா எடுத்துக்கொள்ளும். மகாதேவய்யரை இப்பொழுதே கொடுத்துவிடச் சொல்லுகிறேன்.

முத்துவய்யர்.—கிருஷ்ணசாமி, 999 ரூபாயாக இருந்தால்கூட நான் வாங்கமாட்டேன். நாட்டுக்கோட்டையான் என்பாட்டனா! ஒரு பைசா குறைந்தால் அவன் வாங்குவானா. பணத்தை கோவிலிலேயே கட்டிவைக்கட்டும் சத்யம்பண்ணியே நான் எடுத்துக்கொள்கிறேன். கிருஷ்ணசாமி அய்யனுக்கு இதைக்கேழ்க்க மனதில் சந்தோஷமாயிருந்தபோதிலும் மகாதேவய்யருக்காக வெளிக்கு சலிப்புப்போலக் காட்டிக்கொண்டு, நீங்கள் எப்படியோ போங்கள். உங்களுக்கு நியாயம்சொன்னால் தெரியவில்லை. வீணில் மகாதேவய்யரிடம் தண்டம்பிடித்துத் தான் உங்களுக்கு என்ன பிரயோஜனம்! உங்களிஷ்டம் நானென்னசெய்கிறதென்று போய்விட்டான். மகாதேவய்யருக்கு கோபம் அதிகரித்து நல்லது இனி நீங்கள் முழுது கையையும் தள்ளிக்கொடுத்தால் கூட வேண்டாம். நான் அந்தத்துகையை எங்கேயாவதுவாங்கி கொடுத்துவிட்டு பிறகு சாப்பாட்டுக்குப் போகிறேனென்று உடனே பக்கத்துஊர் நாட்டுக்கோட்டை செட்டியிடம் போய் 1001 ரூபா கடனாக வாங்கிவந்து கோவிலில் வைத்து தான் முன்சொன்னபடி சத்யம்செய்து எடுத்துக்கொள்ளட்டுமென்றார். முத்துவய்யரும் இதற்கெல்லாம் பயப்படவில்லை. அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு உடனே காவேரிக்குப்போய் ஸ்நானம்செய்து ஈரவேஷ்டியுடனே கோவிலுக்கு வந்தார். அங்கே ஊரில் சிலர் முக்யஸ்தர்களானவர்கள் வந்திருந்தார்கள். மகாதேவய்யர் நெய்விளக்கு கர்ப்பூரம் செவ்வரளிமாலை எல்லாம் தயார்செய்து வைத்திருந்தார். முத்துவய்யர் ஸ்னானம்செய்துவிட்டு வந்தபிறகும் அனேகர் சத்யம் என்பது வேண்டாம். பணம் 500 ரூபா போனால் போகிறது என்றார்கள். ஏனென்றால் கிராமங்களில் வழக்கமென்னவென்றால் கோவிலில் ஒருவன் சத்யம்செய்து விளக்கை அணைத்தால், விளக்கை அணைத்தவர்களுக்கும், விளக்கை அணைக்கச் சொன்னவர்களுக்கும் விளக்கணைத்த பிறகு ஒருவருக்கொருவர் சம்பாஷணை சிநேகம் சம்மந்தம் ஒன்றும் ஆகாது. இதற்காகத் தான் ஜனங்கள் முத்துவய்யரை சத்யம் செய்யவேண்டாமென்றார்கள். அவர் கேழ்க்கவில்லை. உடனே முத்துவய்யர், பணத்தைக் கண்டவுடன் வெகு சந்தோஷமாக செவ்வரளி மாலையை எடுத்துப் போட்டுக்கொண்டு, பெருமாள் சன்னதியில் போய்நின்று மகாதேவய்யர் சொன்னபடி, 'பணம் தனனுடையதுதான்; தான் தண்டம் பிடித்தது நியாயந்தானென்று சொல்லி சத்யம்செய்து விளக்கை அணைத்து பணத்தை எடுத்துக்கொண்டார். கிராமத்தாரெல்லோரும் முத்துவய்யனைப்போல இப்படியும் பணப்பேய்பிடித்தவன் உலகத்தில் உண்டாவென்று ஆச்சரியப்பட்டுக்கொண்டு போனார்கள். மகாதேவய்யர் வெகுதுக்கத்தோடு வீடுபோய்ச் சேர்ந்தார்.

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.

## ON DEVOTION AND LOVE.—TO GURU.

## குருபக்தி.—iii

"குருவே சிவமெனக் கூறினனந்தி
குருவே சிவமென்பது குறித்தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய்நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர்கோவே."—திருமந்திரம்.

குரு பக்தியின் யோக்கியதையைப்பற்றி ஆராயுங்கால்:—

உதங்கர் என்றஒர் பிராமணர் சிறுவயதில் வேதங்களைக் கற்றுக்கொள்ள பயிலவ மகாரிஷியினிடம் சென்று அவருக்கு சந்தோஷமுண்டாகத் தகுந்த விதமாய் பணிவிடை செய்து சகல கலைகளிலும் தேர்ந்துவரும் நாளையில், அவரிடம் கற்ற மற்ற பிள்ளைகளெல்லாம் நிர்வாகிகளாய் ஆசானிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு போனார்கள். உதங்கர் மட்டும் குருவினிடத்திலேயே இருக்கும்பொழுது, அவர் இவர்மேல் அந்தரங்க பக்ஷமுடையவராய் சகல தர்ம மர்மங்களும் சித்தியாகும் படிக்கு வரங்கொடு

த்து வெளிக்குக் காட்டாமலிருந்தார். உதங்கர் ஒரு நாள்போல் அநேக வருஷகாலம் குருவிற்கு வேண்டிய விறகு, சலகம், தேன், கந்தமூல பதார்த் தங்கள், சமித்து, தர்ப்பை முதலியவைகளை குறை வில்லாமற் கொண்டுவந்து கொடுத்து வழிப்பட்டு வந்தார். இவருக்கு விருத்தாப்பியம் மேலிட்டு நரை, திரை, மூப்பு முதலியவைகள் வருத்தவும் ஆசாரியருடைய வேலையில் மட்டும் சிரத்தைக் குறைவின்றி நடத்திவரும் நாளையில், ஓர் நாள் இவர் காட்டுக்குப்போய் விறகுவெட்டி ஒரு கட்டு செய்து தலையில் வைத்துக்கொண்டு சிரமத்தை பாராட்டாமல் நடந்து, தம்தலையில் வளர்ந்திருந்த சடையிலொன்று அவ்விறகுக் கட்டைகளிற் சிக்கிக் கொண்டிருப்பதையும் லக்ஷியஞ்செய்யாமல் கொண் டுவந்து குருவினுடைய பன்னக சாலையில் போட் டார். மாட்டிக்கொண்டிருந்த சடை அடியோடு பிடுங்குண்டு இரத்தம் தாரைதாரையாக வடிந்தது. உதிரத்துடன் தரையில் விழுந்த சடை திக்கென்று பற்றிக் கொண்டு திரிலோகங்களையும் தகிக்கத் தக்க தாக எறியத் தொடங்கிற்று. உதங்கர் நோய் பொறு க்கமாட்டாமல் பூமியில் விழுந்து புரண்டு அழுதார், பதறினர், கதறினர். ஆசானாகிய பயிலவர் கண்டு உத்தமியாகிய தன் பெண்ணைப் பார்த்து உதங் கரை தூக்கி எடுக்கும்படி செய்து அழுகிற சிஷ னைத் தேற்றினர்.

உதங்கர் அழுதுக்கொண்டேயிருந்தார். குரு சிஷனைப் பார்த்து என் அழுகிறாய் என்று கேட்க, "ஓஸ்வாமி! தங்களிடத்தில் வித்தியாப்பியாசம பெற்ற சிஷர்களுக்கெல்லாம் உண்மைப்பொருளை யுறைத்து அனுப்பிவிட்டு என்னிடத்தில் மாத்திரம் கிருபை செய்யாமலிருந்தால் எனக்கு துக்கம் வாரா தோ? ஆண்டவனே!" என்றனர். பயிலவர் சிறு நகைவிளைத்து மிகுந்த கிருபையுடன் சொல்லு கிறார்: "ஓ உதங்கரே! நீர் எமக்குச் செய்த பணி விடைகளை யாம் மனப்பூர்வமாய் வியந்து, உமக்கு சகல சித்திகளுமுண்டாக அருள் செய்துள்ளோம். இனி நீர் பெறவேண்டிய பேறு வேறு இல்லை. உம்முடைய சிரத்திலிருந்து ஒரு சடை விழவும், அது பற்றி எரியவும், திரிலோகமும் அதனுல் வரு ந்தவும் நேர்ந்ததை நீர் அறிந்திலீரோ? உம்முடைய உபசரணைக்கு ஓர் தகுந்த உத்தமியும் எற்பட்டு விட் டனள். இவையெல்லாம் ஆசாரியபக்தி பண் ணின பலத்தினுல் சித்தியாயிற்றென்பதற்கு சந் தேகமில்லை. அறுந்த சடை மறுபடியும் உமது முடி யிற்பொருந்தகிருபை புரிந்தோம். இந்தப்பெண்ணை விவாகஞ் செய்துக்கொண்டு இன்பத்தை யனுப வித்து, சகல பெரியோர்களும் உம்மைப் பணிந்து மகா பூஜ்ஜியரென்று கொண்டாடக் கடவது" என்று ஆசீர்வதித்தனர்.

அப்பால் சிஷன் குருவாக்கியப்படி மகாலக்ஷ்மி போன்ற பெண்ணை விவாகஞ் செய்துக்கொண்டு பயிலவர் ஆஸ்சிரமத்திலேயே யிருக்கையில், ஒரு நாள் உதங்கர் குருவை சிரசாஷ்டாங்கமாக நமஸ் கரித்து, ஐயா ஸ்வாமி! தேவரீர் அடியேனுக்கு கல்வி கற்பித்த ஆசாரியரும், கன்னிகாதானஞ்செய்த மாமனுரும், சகல உபதேசங்களும் செய்து உண் மைப்பொருளை யுணர்த்திய குருவுமாகையால் தேவ ரீருக்கு குருதக்ஷணை கொடுக்க மனமிருக்கின்றது. தேவரீர் மனதுக்கு வேண்டிய பொருளைக் கேட் டால் அடியேன் கொடுக்கிறேன். தங்கள் கரு த்தை வெளியிட வேண்டுமெனப் பிரார்த்தித்தார். அம்முனிவர் உதங்கரை நோக்கி எனக்கு ஒன்றும் தேவையில்லை என்று மறுத்தனர். மறுபடியும் உதங் கர் வேண்டினர். அப்பொழுது ஆசாரியர்— மாணு க்கனே, மருகனே நமக்கு எதிலேயும் அவாவில்லை. உம்முடைய வந்தனை வழிப்பாடே எமக்குப் போது மான குருதக்ஷணையாகும். அதுவே போதுமெ ன்று உரைத்தனர். இவ்விதம் மறுத்துச் சொன் ஞல் அடியேனுக்கு ஒப்பாது என்று மறுபடியும் சிஷர் வேண்டினர். அப்படிக்கானுல் எமது மனை வியும், உமது குருபத்தினியும், மாமியுமாகியவரிட த்தில் சென்று கேட்டு, அவர் மனதுக்கு வேண்டி யதைச் செய்யென்று புகன்றனர்.

உதங்கர் அக்கட்டளையை சிரமேற் கொண்டு குரு பத்தினியாரைக்கண்டு வணங்கி, குருவினிடத்தில் நிகழ்ந்தவைகளைச் சொல்லி பயபக்தியுடனே யெதிர் நின்று, தங்கள் கருத்தை வெளியிடவேண்டுமென்று கேட்க, அந்த அம்மன் உதங்கருடைய பக்தி விஸ் வாசத்திற்கு மகிழ்ந்து, ஓ உதங்கரே! மனுசாஸ்திர விதி பிசகாமல் செங்கோல் செலுத்தித் தன்னுயிர் போல மன்னுயிரனைத்தையும் காக்கும் பவுஷ்யந்த மகாராஜனுடைய மனைவி செவியிலணிந்திருக்கிற கோடிசூரியப் பிரகாசமுள்ளதாகிய நாகரத்தினக் கம்மலைக்கொண்டுவந்து கொடுப்பாயாகில் அதுதான் குருதக்ஷணையென்றுசொல்ல, உதங்கர் கேட்டு மிகுந்த சந்தோஷமடைந்து, அந்தக்கம்மலை இத் தினை நாளில் கொண்டுவந்து கொடுக்கிறேனென்று கெடுவிட்டு வணங்கி விடைபெற்று பவுஷ்யந்த மகா ராஜனை நாடி காடுமேடு, செடிகொடி, மலையாறு, எரி குளம், முதலியவைகளைக்கடந்துசென்று, ஒரு அர ண்யத்தில் வேந்தனைக் கண்டார். அவ்வரசனே செவந்தகண்ணும், நெருப்புப் பொறிபறக்க விழிக் கும் கோபமும், பர்வதாகிர்தியாய் கருத்தமேகம் போன்ற சரீரமும், தீராப்பசியும், தெளியாத்தாக மும், எப்போ யாரைக்கொல்வோமென்ற நரமாமிச வாஞ்சையுமுடையவனுய் புத்தி ஸ்திரமின்றி யிருந் தனன். உதங்கர் பயப்படாமல் ராஜனிடத்தில் சென்று நின்று ஆசீர்வதித்தனர். இராக்ஷசனுக் கொப்பாகிய தோற்றத்தையுடைய இராஜன், இவ ரைக்கண்டு சந்தோஷங்கொண்டு, "ஓ ரிஷியே! என் வயற்றில் பசியோ குடலைப் பிடிங்கித்தின்னு கிறது. என்பசி தீரும்படியாய் நீர் வந்தீர். கரும் பினுமினிதாகிய விருந்தே! உன்னைக்கொன்று என் பசிதணிக்கிறேன்." என்று கையிரண்டையும் நீட்

டிக் காட்டினான். உதங்கரொடுங்கிச் சொல்லு கிறார்.

"தேவதைகளிலுமுயர்ந்தவர் குரு. அப்பேர்ப் பட்ட ஆசானுக்கு தக்ஷிணை கொடுக்கவேண்டி உம்மை நாடிவந்தேன். வந்த என்னை, நீ யார்? வந்த காரியமென்ன? வென்று கேளாமல் தர்ம விரோதமாகிய சொல்லைச் சொன்னாய். நீ சரீர மெடுத்த நாள்முதல் பொய் பேசியறியாத புண்ணிய தேகி, பிரதாபசூரர், வேலாயுதந்தரித்த தீரர். உல காள்பவராகிய உத்தமர், நீதிசாஸ்திரந் தெரிந்தவர். அப்படிப்பட்ட உமக்கு தீவினை வசத்தால் இத்தேக மும் கொலைசெய்யும் சிந்தையும் வந்திருக்கின்றது. அங்ஙனமில்லாமற்போனால் உமது புத்திக்கு மயக் கம் வரத்தக்கதே யில்லை. இப்பவும் கோபத்தைத் தணித்து, என்னாபத்தைத்தீர்த்து, உன் பாபத்தை யொழித்து, சாந்தத்துடன் மேல்வரும் லாபத்தைக் குறித்து, நான் வந்த சங்கதியைக் கேட்டருளுமென் றுரைத்தார்.

அரசன், "இந்தக் காட்டின் வழியாக யாத்திரை போகிற மனிதரில் தினம் ஒருவனைப் பிடித்துத் தின்று பசி தீரும்படியாய் தேவதைகள் எனக்கு வரங் கொடுத்திருக்கிறார்கள். அது தப்பாமல் தினம் ஒரு மனிதனையே தின்று வருகிறேன். இன்று என் கண்ணெதிர் வந்தவர் நீரே. நான் உம்மை விடேன். எப்படியும் கொன்று தின்று பசி தீருவேன்" என்றனன்.

உதங்கர் புன்சிரிப்புடன், "பூபதியே! பசி நோய் யாவருக்கும் பொல்லாது. அந்த ரோகம் மேலிட் டால் ஏதாகிலிமொரு ஆகாரம் போடாமல் தீராது. மானங் குலம், கல்வி வண்மை, அறிவுடைமை, தானம் தவம், தாளாண்மை, இனிய சொல், பக்தி சுத்தி முதலியயெல்லாம் பசி வந்த காலத்தில் பற ந்து போய்விடும். அப்படிக்கிருந்தாலும் வஸ்துநிலை யும், சாந்தகுணமும், தூய்மையும் வாய்மையு முடைய உமது பசிக்கு உதவியாகும்படி அற்பமான என்னுடலுக்கு வாய்த்ததே சந்தோஷம். அதுவே சிலாக்கியம். ஆயினும் நான் குருதக்ஷிணையின் பொருட்டாக வந்தவனாதலால், நான் விருப்பிய பொருளைக் கொடுத்தனுப்பினால் ஆசாரிய சம்பா வனையைக் கொடுத்துவிட்டு பேச்சுத்தப்பாமல் இவ் விடத்திற்கு வந்து உமது பசிக்கு இரையாகிறேன்" என்றனர்.

அரசன், "ஓ ரிஷியே! நீர் வருகிற மட்டும் உமது பிராணன் ஸ்திரமோ? நானெப்படி நம்புவதெ"ன உதங்கர் "பெரியோர்களாயிருக்கப்பட்டபேர்கள் கிடைக்காத வஸ்து கிடைப்பதாயிருந்தாலும் ஜீவ ஹிம்ஸை செய்யத்துணியார்கள். சகல தர்மங்களு மறிந்த நீர் என்னைக்கொன்று பசி தீர்த்துக்கொள்ள விரும்புவீரானால், நான் விரும்பி வந்த பொருளைத் தந்து என்னை எதிர் பார்த்துக்கொண்டிரும். நான் உரைத்த மொழி தப்புவதில்லை. தப்புவேனாகில் சமுத்திர ஜலம் பொங்கி பூமியை முழுத்தக்கடவது. இதற்கு சாக்ஷி ஆகாய வீதியிலிருக்கிற தேவதை களே" என்று கூறிய உறுதி மொழிகளைக்கேட்ட அரசன்,

> இன் சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
> வன் சொலா லென்று மகிழாதே—பொன்செய்
> ததிர் வளையாய் பொங்காதழற் கதிரால் தண்ணென்
> கதிர் வரலாற் பொங்கும் கடல்.

—என்றபடி மனமிரங்கி, ஓ ரிஷியே! நீர் வந்த காரி யமேதென, உதங்கர் முகமலர்ந்து "அரசனே என் ஆசாரியருடைய மனைவி அருந்ததிக்கொப்பான அம்மாள், உம்முடைய மனைவி யணிந்துக்கொண் டிருக்கும் குண்டலத்தை குரு தக்ஷிணையாகக் கொண்டு வந்து கொடுக்கும்படி கேட்டார்கள். அதற் காக வந்தேன். தயவுசெய்து தரவேண்டும்" என் றனர்.

இராஜன், "கொடுக்கிற விஷயத்தில் தன்னுடை மையைக்கொடுக்க வேண்டுமேயன்றி பிறருடை மையைக்கொடுப்பதில் பிரயோஜனமில்லை. ஆகை யால் என் சொந்தப்பொருளைக்கேளும்" என்றனன்.

உதங்கர், "யான் ஜென்மாந்திரத்தில் பண்ணிய புண்ணிய வசத்தால் ஆசாரிய பத்னி கேட்கவும், உம்மிடம் நான் உயிர்ப்பிச்சை பெறவுமாயிற்று. அந் தக் குண்டலமே வேண்டும்" என்றனர்.

அரசன், "என்னரண்மனைக்குப்போய் என் மனை வியைக்கண்டு, நான் சொன்னதாய் சொல்லி குண் டலத்தைப் பெற்றுக்கொள்ளுமென," அப்படியே உதங்கர் அரண்மனையை நாடிச் சென்று உத்தமி யாகிய இராஜபத்னியைக் கண்டு தான் வந்த கார ணத்தையும் அரசன் ஆக்கினையையும் தெரிவித்தார். அரசன் மனைவி தன்னாயகர் ஒரு அடையாளங் கொடுத்தருள்வாராகில் அட்டியில்லாமற்றருவே னென்றள்.

உடனே உதங்கர் வேந்தனையணுகி அடையாளங் கேட்க அரசன் (அதிவிதமனங்கதியதுவலாலோரு கதியில்லை.) என்ற மொழியைக்கூற, ரிஷியானவர் அதை அரசன் மனைவியிடஞ் சொல்ல, அவள் அதிக சந்தோஷமடைந்து குண்டலத்தைக் கொடுத்துக் கூறுகிறாள்.

"இக்குண்டலத்தை தரித்துக் கொண்டபேருக்கு பசியிராது, தாகமணுகாது. அக்னி சூரியன் முத லியவர்களுடைய வெப்பம்சேராது. கிழவிகள் தரித்துக்கொண்டாலும் குமரிகளாவார்கள். சௌந் தரியமும் செல்வமும் பெருகும். இது இருக்கு மிடத்தில் லக்ஷம் பிராமணபோஜனம் நடந்துக் கொண்டேயிருக்கும். ஆனால் இதைக் கொண்டு போக வேண்டுமென்று அநேகர் காத்துக்கொண் டிருக்கிறார்கள். நாங்கள் கொடுத்த குண்டலத்தை

குரு தக்ஷிணையாகிய மேலான தானத்தை செய்து முடிக்கிற பரியந்தம், வெகு ஜாக்கிரதையாகக் கொண்டுபோகவேண்டும். எக்காரணத்தைக்கொண்டாகிலும் கீழே வைப்பீரானால் உடைமை உம்முடையதல்ல. மோசம் போசாமல் கொண்டு போய்க் கொடும்" என்றனள்.

உதங்கர் வேந்தனிடம் சென்று குண்டலத்தைக் காட்டி, நீர் சொல்லிய அடையாள வசனத்தை உமது மனைவியறிந்துக்கொண்டவித மெவ்வாறென, அரசன் தன்னுடைய தற்கால நிலைமைக்குக் காரணத்தைக் கூறி அடையாள வசனத்திற்கு (நாயகனுக்குரிய கருமங்களையும் தருமங்களையும் பணிவிடைகளையும் செய்வதை விட பெண்களுக்கு வேறு கதியில்லை) என்பதை நான் சொல்லித்தடுத்தும் என்னை விட்டு சென்றவளே என்று சாற்றினேன், அவள் அதை யறிந்துக்கொண்டு குண்டலத்தைக் கொடுத்தாளென்றனன்.

உதங்கர், "குண்டலத்தை குருதக்ஷிணையாகக் கொடுத்துவிட்டு உம்முடைய பசி தீர்க்க வருகிறே"னென, அரசன், "நீர் வரவேண்டாம், நான் சுகப்படுகிற வழியைத் தேடு"மென விடைகொடுக்க உதங்கர் குருபத்நியை நாடிவருகிறார்.

இது சங்கதி இங்கே இப்படியிருக்க, பயிலவர் ஆசிரமத்திற்கு வந்து உதங்கர் எங்கேபோனாரென்று மனைவியைக்கேட்க, குருதக்ஷிணைக்காக குண்டலங்கொண்டுவரப் போனாரென்று விண்டனள். பயிலவர் அதிக கிலேசப்பட்டு குண்டலத்தை விரும்பி இராஜனுடைய குணத்தையறியாமல் அனுப்பினாய். அந்த இராஜன் ஒரு ரிஷியின் சாபத்தினால் தினம் ஒருமனிதனைக் கொன்றுதின்று வயிறுவளர்க்கிறான்: அப்படிப்பட்டவனிடம் நீ இவரையனுப்பியது குற்றம் குற்றமென, ஆசாரிய பத்நி மனங்கலங்கி உதங்கர் போனவிடத்தில் ஒருகுறைவும் வாராமல், என்னை பாவம் சாராமல், அருள்புரிய வேண்டுமென அழுது அடிபணிந்தனள். பயிலவர் தமது சிஷ்யரும் மருகனுமாகிய உதங்கரை பூரணகிருபையுடன் ஆசீர்வதித்துச் சென்றனர்.

இவ்வாசீர்வாத பலத்தினாலும், உதங்கர் மனப்பூர்வமாய் பவுஷ்யந்த மகாராஜனுக்கு சாபம் நீங்க வேண்டுமென்று நினைத்ததாலும், இராஜன்செய்த தான விசேஷத்தினாலும், இராஜபத்நி அவரிஷ்டப்படி குண்டலத்தை யாதொரு மனக்குறைவுமின்றி கொடுத்ததினாலும் உடனே சாபநீங்கி முன்னிலும் பதின்மடங்கு தேஜசும், ஞானமும் பிரகாசிக்க, ஓடோடியும்வந்து உதங்க மகாரிஷியைக்கண்டு பணிந்து தோத்திரம்பண்ணித் தொழுதான்.

> கேசவரைக் காணவிடத்து நெஞ்சசரவே துதித்தல்
> ஆசானை யெவ்விடத்து மப்படியே—வாச
> மனையாளைப் பஞ்சணையின் மைந்தர்தமை நெஞ்சில்
> வினையாளை வேலை முடிவில்.

—என்றபடி குருவைப்புகழ் எண்ணங்கொண்டவராய் உதங்கர், "என்னாலொன்றுமில்லை எந்தலே; என் குருசுவாமியின் கடாக்ஷத்தினாலே உமக்கு இந்தவைபவ முண்டாயிற்று. சுகமாய் பட்டாபிஷேகஞ் செய்துக்கொண்டு உலகாளு"மென்று வாழ்த்தி விடைபெற்றுச் செல்லுகையில், வழியில் ஒரு வில்வமரத்தைக்கண்டு, அரையில் கட்டியிருந்த குண்டலமூட்டையை அம்மரத்தின் பொந்தில்வைத்து, மரமேறி வில்வமும், வில்வப்பழமும் கொய்தனர். அப்பொழுது ஒருபலமான காற்றடித்து பொந்திலிருந்த குண்டலமூட்டை கீழேவிழ, மரத்தடியிலிருந்த ஒரு பெருநாகம், குண்டலத்தைக் கவ்விக்கொண்டு ஓடி ஒருபுற்றிலே புகுந்தது. உதங்கர் கண்டு புற்றிற்குள் சர்ப்பத்தைக்காணாமல் பெருமூச்சுவிட்டு விசாரப்பட, பூமாதேவி ஒரு கன்னிகையாகத் தோன்றி "ஏ! ரிஷியே? உன்குண்டலத்தைத் திருடிச்சென்றவன் ஐராவதன் என்னும் நாகன். அவன் நாகலோகம்போய்ச் சேர்ந்தான்" என்றனள்.

உதங்கர் என்ன செய்வாரினி! அக்குண்டலம் என்கைக்கு கிடைத்தாலாச்சு, இல்லாவிட்டால் என் பிராணன் போச்சுஎன்று சொல்லிக்கொண்டு செல்லுகிறார்.

உடனே தேவேந்திரர் இவருக்கு பிரத்தியக்ஷமாகி நாகலோகத்திற்குச் செல்ல வழிகாட்ட உதங்கர் நாகலோகஞ்சேர்ந்து ஒன்றும் தோற்றாமல் திகைக்க, அக்னிதேவர் ஒருகுதிரை வடிவாகத்தோன்றி தன் செவியில் ஊதும்படி சொல்ல, இவரு மப்படியே செய்ய, அதனால் இடிமுழக்கம்போன்ற பேரொலியுண்டாக, குண்டலத்தைத் திருடிக்கொண்டு சென்ற நாகத்தை மற்றநாகங்கள் வருத்த, ஐராவதன் என்னும் நாகம் குண்டலத்தை எடுத்துக்கொண்டு வந்து உதங்கர் முன்னேவைத்து அபராதம் பொறுக்கவேண்டுமென்று அடிமேற்பணிந்தது.

உதங்கர் பழிபாராட்டாமல் குண்டலத்தை கைக்கொண்டு, குருவினது கருணையினால் குருபத்நியிடம் சென்று குறித்த காலத்திற்குள் குண்டலத்தைக் கொடுத்து அடிபணிந்து, ஆசாரியரை நமஸ்கரித்து, நடந்த விர்த்தாந்தங்களைச் சொன்னார்.

ஆசாரியர் அதிக சந்தோஷப்பட்டு நீர் பூர்வஜன்மாந்திரத்தில் நல்லதவம் பண்ணினவராகையால் அரிதான காரியங்களெல்லாம் உமக்கு சுளுவாக நிறைவேறியது. உமக்கு இன்னும் வேண்டிய வரங்களையும் தந்தேன் என்றனர்.

இவர் குருபக்தி விசேஷத்தால் ஸ்ரீ கிருஷ்ணசுவாமியை ஒருசமயத்தில் சபிப்பேன் என்றும்கூறினார். ஆகவே இவர்மேற் கொண்ட குருபக்திக்கே இவ்வளவுபெருமை வாய்த்ததென்றால் ஜகதீசனிடத்தில் பத்திசெய்கிறவர்களுடைய பெருமையை சொல்ல யார்தான்வல்லவர்?

டி. ஸி. வெங்கட்டரமணய்யர்.

# "MERRY WIVES" OF MODERN IND.

[AFTER SHAKESPEARE'S "MERRY WIVES OF WINDSOR."]

(*By S. Ramaswami Aiyar, B.A.*)

## கற்பைக் காப்பாற்றிய பெண்கள்.

### இந்நாடகத்தின்வேஷதாரிகள்.

ராயபகதூர் பீமவர்மன்:

குணசுந்தரி, பானுமதி, } இவர்கள் பேரில் காமங்கொண்டவன்.

காமசுந்திரன்...மோகனமாலையின் பேரில் காதல் கொண்டவன்.

விக்ரமவீரன்.

கேசவதத்தன்...விக்ரமவீரன், மருமகன்.

வீரசேனன், உக்ரசேனன், } இரண்டு சினேகிதர்கள்.

வாசலன்...வீரசேனனுடைய மகன்.

ப்ரதாபன்...கேசவதத்தனுடைய சினேகிதன். பள்ளிக்கூடத்து வாத்தியார்.

ப்ராக்ரமன்...வைத்தியர்.

சகுனன்...ஓர் பெரிய ஹோடல்காரன்.

கருப்பன், முத்தன், } உக்ரசேனன் ஆள்கள்.

மார்த்தாண்டன், முனியன், வெறியன், வக்ரன், } பீமவர்மனுடைய ஆள்கள்.

சீலன்...கேசவதத்தனுடைய வேலைக்காரன்.

வீரன்...பாராக்ரமனுடையவேலைக்காரன்.

பானுமதி...உக்ரசேனன் பெண்சாதி.

குணசுந்தரி...வீரசேனன் பெண்சாதி.

மோகனமாலை...வீரசேனன்பெண்; காமசுந்திரன் பேரில் காதல்கொண்டவள்.

பத்மினி...பாராக்ரமன் சமையற்காரி.

### 4.—வது அங்கம்.

#### காக்ஷி. 2.

(59–வது பக்கத்தொடர்ச்சி.)

உக்ரசேனன வீடு: ஓர் அறை.

பீமவர்மன், பானுமதி வருகிறார்கள்.

பீமவர்மன் :—பெண்ணே பானுமதி, நீ வருத்தப்படுவதைப் பார்த்துவிட்டு எனக்கு நான் சாக்கடையில் பட்ட கஷ்டம் கூட மறந்து போய்விட்டது. இனிமேல் நாம் சுகிக்க வேண்டுமேயல்லாது பழய சங்கதிகளை நினைத்துக்கொண்டு நமது சுகத்தைக் கொல்ல நேரமில்லை. நீ என்பேரில் யதார்த்தமாக ஆசை வைத்திருக்கிறாயென்பது எனக்கு இப்போது தான் தெரிகிறது. பகவான் நம்மிருவரையும் ஒன்று சேர்க்க பிரயத்தினம் செய்துவிட்டார். இனி யார் தடுத்தபோதிலும் இதை நிறுத்தமுடியாது. இனி நீ கிடைத்தபிறகு எனக்கு ஒன்றும் லக்ஷ்யமில்லை. ஏன் நீ தூரநிற்கின்றாய் என் மடியில் உட்கார்வா. என் தங்கமே உன் அழகை அனுபவிக்காமல் ஒரு நிமிஷம் கூட இருக்க என்னால் முடியவில்லையே.

பானுமதி:—ஆக்கப்பொறுத்தவர்களுக்கு ஆறப்பொறுக்கவில்லையென்பது தங்களுக்குத்தான் சரியாக இருக்கிறது. கிணற்றுநீரை வெள்ளம்கொண்டு போகுமா.

பீமவர்மன் :—பெண்ணே நீ ஏன் இந்த அயோக்யப்பயல்களை வைத்துக்கொண்டு அவஸ்தைப் படுகிறாய். இவனைத் துலைத்துவிடக்கூடாதா. நான் விசாரமில்லாமல் உன்னோடு எப்போதும் இருக்கலாமே.

பானுமதி:—அவனை எப்படி துலைப்பது தெரியவில்லையே.

பீமவர்மன் :—இது தெரியாதா உனக்கு. ... ... பிறகு நான் உன்னை கலியாணம் செய்துகொள்வேனே நல்லது நான் வந்திருக்கிறது குணசுந்தரிக்கு தெரியுமா?

பானுமதி :—அவளுக்குத் தெரியாமல் எத்தனையோ ரகசியமாயல்லவா நான் பத்மினியை உங்களிடம் அனுப்பினேன்.

பீமவர்மன் :—அந்தக் காமாட்டி படவாப்பயல் உக்ரசேனன் இங்கே இல்லையே. நிச்சயந்தானே? ஒருவேளை நடுவில் அன்றுபோல் இன்றைக்கும் வந்து விடுவானோ.

பானுமதி :—அதற்காக தாங்கள் பயப்பட வேண்டாம். அவர் இன்றைக்கு சாயந்திரம் தான் வருவார்.

குணசுந்தரி :—(உள்ளே யிருந்து) பானுமதி, கதவைத்திற. சீக்கிரம், சீக்கிரம்.

பானுமதி:—அய்யோ இதென்ன கஷ்டவேளை. இன்றைக்கும் யமன்போல் வந்துவிட்டாளே. தயவு செய்து அடுத்த அறையில் ஒண்டிக்கொள்ளுங்கள். அவளுக்கு சீக்கிரம் எதாவது சாக்கு சொல்லிவிட்டு தங்களிடம் ஓடிவந்துவிடுகிறேன்.

குணசுந்தரி வருகிறாள்.
(பீமவர்மன் ஒளித்துக்கொள்கிறான்.)

குணசுந்தரி:—என்ன சங்கதி! உன்னைத்தவிர இங்கே வேறுயாராவது இருக்கிறார்களா. ஒருவரும் இல்லையே.

பானுமதி:—என் அப்படி கேழ்க்கிறாய்! என் ஆள்கள் தான் வீட்டில் இருக்கிறார்கள். வேறு யாவரும் இல்லை.

குணசுந்தரி:—யதார்த்தம் தானா, ஒருவருமில்லையே.

பானுமதி:—(தனிமையாக) கெட்டியாய் சொல்வேன், (உரக்க) யதார்த்தம்தான்.

குணசுந்தரி:—நல்ல வேளை. இங்கே ஒருவரும் இல்லையென்று கேழ்க்க எனக்குவெகு சந்தோஷமாயிருக்கிறது. இருக்கட்டும்.

பானுமதி:—என் என்ன சங்கதி.

குணசுந்தரி:—என்ன, என் என் என்கிறாயே! உன் புருஷனுக்கு பொறாமையின் அதிகத்தில் பைத்யம் கூட பிடித்துவிட்டதுபோலிருக்கிறது. முன் போலே எதோ சந்தேகங்கள் தோன்றி பெண்பெண்டாட்டிகளையெல்லாம் வைகிறான். பெண்களைக்கண்டால் பல்லைக் கடித்துக்கொண்டு திட்டுகிறான். கலியாணம் செய்துகொண்டவர்களையெல்லாம் வைகிறான். இருந்தாப்போல் படீரென்று தலையில் அடித்துக் கொள்கிறான். சற்று வைகிறான். இப்படியெல்லாம் செய்துசொண்டு வருகிறான். நல்லவேளையாய் அந்த பூதம்போல இருக்கப்பட்ட மனிதர் இங்கே இல்லை. எனக்கும் ரொம்ப சந்தோஷந்தான். வரட்டும், அன்றைய தினம்போல மறுபடியும் அவமானத்தை யடையட்டும்.

பானுமதி:—இப்போது எத்தனை தூரம் வந்திருப்பார்.

குணசுந்தரி:—அனேகமாய் பக்கத்தில்வந்து விட்டார். தெருவின் கடைசியில் இருப்பார். சற்று நேரத்திற்கெல்லாம் இங்கேவந்துவிடுவார். முன் போல் எல்லோரையும் கூட்டிக்கொண்டு வருகிறான்.

பானுமதி:—அய்யோ நான் கெட்டேன். அந்தப் பெருமனுள்ள மனிதர் இங்கே இருக்கிறாரே, நான் என்னசெய்யட்டும்!

குணசுந்தரி:—இதை நீ முன்னமே சொல்லக் கூடாதா. இனிமேல் என்ன செய்கிறது. இனி நீ உன் அவமானத்தால் வெளியில் தலைகாட்ட வேண்டியதில்லை. அவனும் இன்றையதினம் செத்தான். நீ என்ன பெண்பெண்டாட்டி. சீக்கிரம் அவனை வெளியில்தாட்டு. கொலையுண்டு போவதை விட அவருக்கு அவமானப்பட்டாவது தப்பித்துக் கொள்வது நலம்.

பானுமதி:—அவரை எந்தவழியால் தாட்டுவது நான் அவரை இந்தத்தடவை எப்படி காப்பாற்றப். போகிறேன். முன்போல் கூடையில்போடட்டுமா.

(பீமவர்மன் வெளியில் வருகிறான்.)

பீமவர்மன்:—நான் இனிமேல் கூடையில்போக மாட்டேன். அவன் வருதற்குள் நான் வெளியே போய்விட முடியாதா?

குணசுந்தரி:—அய்யோ அப்படி போனால் மரணம் நிச்சயம். உக்ரசேனனுடைய சகோதிரர்கள் மூன்று பேர்கள் துப்பாக்கியும் கையுமாக காத்திருக்கிறார்களே. இல்லாவிட்டால் உம்மை இந்நேரம் வெளியில் தாட்டியிருக்கலாமே. நல்லது உமக்கு இங்கே என்னவேலை. உமக்கு யார் ராயபகதூர் பட்டம் கொடுத்தது. ஒருவேளை, இப்படியெல்லாம் செய்து தூர்படுவதில் கெட்டிக்கார புருஷர்களுக்குத் தான் ராயபகதூர் என்று பட்டம் கொடுப்பது வழக்கமோ. உமது தேகத்துக்கும், உமது அவலக்ஷணத்திற்கும், உமது கிழத்தன்மைக்கும், கற்பழிக்கும் குணங்கூட வேண்டுமா. பானுமதி தலைவிதி. நல்லது சீக்கிரம் எதாவது எற்பாடு செய்யுங்கள்.

பீமவர்மன்:—நான் என்ன செய்யட்டும். உயர புகைப் போக்கியில் எறி ஒளித்து விடட்டுமா.

பானுமதி:—அது கூடாது. அவர் அட்டவணை போட்டு வைத்துக்கொண்டு வீட்டில் ஒரு இடம் விடாமல் முன் தடவையிலேயே சோதனை போட்டார். வீட்டிற்குள் எங்கேயும் ஒளிக்க முடியாது. நிச்சயமாய் கண்டு பிடித்து விடுவார்கள்.

பீமவர்மன்:—ஆனால் நான் வெளியே ஓடிப் போய்விடுகிறேன்.

குணசுந்தரி:—நீர் இந்த உருவத்தில் போனால் உம்மை நிச்சயமாக சுட்டு விடுவார்கள். மாறுவேஷம் போட்டுக்கொண்டுதான் போகவேண்டும்.

பானுமதி:—நாம் இவருக்கு எப்படி வேஷம் போடுகிறது.

குணசுந்தரி:—அய்யோ எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே. அவர்களும் இதோ வந்து விடுவார்கள். எதாவது இவருக்கு தகுந்த பெருமனுள்ள பெண்பெண்டாட்டியின் உடுப்புகள் இருந்தால் அதை போட்டு வெளியில் அனுப்பிவிடலாம். இவருக்கு தகுந்த உடுப்பு சொல்லியல்லவா செய்யவேண்டும்.

பீமவர்மன்:—எதாவது ஒரு எற்பாடு சீக்கிரம் செய்யுங்கள். என் உயிர் பிழைத்தால் போதும். இனி எனக்கு பெண்பெண்டாட்டி ஆசையே வேண்டாம்.

பானுமதி :—நல்ல வேளை எனக்கு இப்போது தான் ஞாபகம் வந்தது. எங்கள் வீட்டுக்கு முானீமீ என்று ஒரு கோஷா ஜோஸ்யப்பெண் வருவாள். அவளைக்கண்டால் என் புருஷனுக்கு ஆகாது. இரண்டு, மூன்று தடவை அவளை வைது வீட்டை விட்டு வெருட்டியிருக்கிறார். அவள் சூனியகாரி யென்றும் வீட்டுவழி வரக்கூடாதென்றும் சொன்னார். மறுபடியும் ஒரு தடவை அவள் வந்தபோது என் புருஷன் வந்ததையறிந்து, தன்மேல் போட்டுக்கொள்ளும் உடுப்பை அவசரத்தில் மறந்து ஓடிப்போய் விட்டாள். அது என் வீட்டிலேயே இருக்கிறது.

துணசுந்தரி :—ரொம்பவும் நல்லது. நான் அந்த ஜோஸ்யப்பெண்ணை பார்த்திருக்கிறேன். அவள் இவரைவிட பருமன். அந்த உடுப்பு போதும். சீக்கிரம் கொண்டுவா.

பானுமதி :—ஆனால் என் புருஷனுக்கு அந்த கோஷாவைக்கண்டால் ஆகாது. இப்போது கண்ட போதிலும் ஒரு வேளை அடித்தாலும் அடிப்பார்.

துணசுந்தரி :—அடித்தாலும் அடிக்கட்டும். உயிர் போகாமலிருந்தால் சரிதான். நீ போய் சீக்கிரம் அதைக்கொண்டுவா.

பானுமதி :—ஆனால் என் புருஷன் சமீபத்தில் வந்திருப்பாரா.

துணசுந்தரி :—சீக்கிரம் அவர் இதோ வந்து விட்டார். நேரில் பார்த்தவன்போல், முன் தடைவை, கூடையில் தான் அவனைக் கொண்டுபோனார்கள் என்று சத்யம் பண்ணுகிறான்.

பானுமதி :—இப்போது முன்போல் அந்தக் கூடையையும் வெளியில் அனுப்பினால் என்ன.

துணசுந்தரி :—அப்படியே செய்யலாம். முன்னால் அவனுக்கு வேஷம் போடு.

பானுமதி :—அந்தக்கடைசி அறையில் அந்த உடுப்பு ஆணியில் மாட்டியிருக்கிறது.

துணசுந்தரி :—ராயபகதூர் பீமவர்மரே, நீர் இப்போது கோஷாவாகப்போகிறீர். ஏனென்றால் உமது முகத்தைப்பார்க்க ஒருவருக்கும் இஷ்டம் இல்லை. சீக்கிரம் அந்த அறையில் ஓடிப்போய் அந்த உடுப்பை எடுத்துப்போட்டுக்கொள்ளும். நீர் உடனே ஜோஸ்யச்சியாகி விடுவீர். பிறகு, உமக்கு அடி விழுமா விழாதா என்று ஜோஸ்யம் பார்த்து சொல்லும். ஜோஸ்ய ஸ்திரீ உடுப்பு போட்டால் ஜோஸ்யம் தெரியாமல் போகுமா. சீக்கிரம் வாரும். பானுமதி உன் ஆள்களைக் கூப்பிடு.

பானுமதி:—அடே கருப்பா, அடே முத்தா, சீக்கிரம் வாருங்கள்.

கருப்பன் முத்தன் வருகிறார்கள்

நீங்கள் இந்தக் கூடையை எடுத்துக்கொள்ளுங்கள். உங்கள் யஜமானர் கீழே வைக்கச்சொன்னால் வைத்து விடுங்கள் போகிறான்.

கருப்பன் :—முத்தா சீக்கிரம் கூடையைப்பிடி.

மூத்தன் :—ஜாக்ரதையாய் புடியப்பா அன்றயதினம் இதில் இருந்த தடியன் இன்றைக்கும் இருக்கப்போகிறான். இன்றைக்கு இருந்தால் அவன் செத்தான்.

கருப்பன் :—நல்ல வேளை, இல்லையப்பா, இன்றைக்கு கூடை லேசாயிருக்கிறது. அன்றைக்கு, எடுக்கும்போதே என் கை பாதி ஒடிந்து விட்டதே.

(கொண்டு போகிறார்கள்.)

உக்ரசேனன், வீரசேனன், விக்ரமவீரன், பராக்ரமன், ப்ரதாபன், கேசவதத்தன் வருகிறார்கள்.

உக்ரசேனன் :—வீரசேன, இப்பொழுது உனக்கு நேரில் காண்பித்தால் பிறகு கூட என்னை கேலி பண்ணுவாயா.

(ஆள்கள் கூடையுடன் வருகிறார்கள்.)

அயோக்யப் பயல்களா. யஜமானிக்குத் தகுந்த அயோக்யப்பயல்கள். கூடையை கீழே வையுங்கள். பானுமதியை கூப்பிடுங்கள். பதிவிருதா சிரோமணியை சீக்கிரம் கூப்பிடுங்கள். ஓய் கூடைக்குள் இருக்கும் சோர புருஷரே வெளியே வாரும். இந்தத் தடவை உம்மை விடுவதில்லை. அயோக்யப்பயல்களா. எல்லோரும் வீட்டில் எனக்கு விரோதமாக ஒன்று கூட்டிக்கொண்டு இப்படி சகாயம் செய்கிறீர்களா. இப்பொழுது எல்லோருக்கும் தகுந்த தண்டனை செய்கிறேன். எங்கடா பானுமதி. அவள் சோர புருஷனை நாலுபேர் முன்பாக பார்க்கக் கூடாதென்று இருக்கிறாளா. சீக்கிரம் கூப்பிடு. அவள் வண்ணானுக்கு அனுப்பும் அழுக்கு சீலையில் எத்தனை கள்ள புருஷர்கள் இருக்கிறார்கள் என்பதை காண்பிக்கிறேன்.

வீரசேனன் :—உக்ரசேன, நீ இப்படி செய்வது சரியல்ல. கொஞ்சம் யோஜித்து செய்யவேண்டும்.

ப்ரதாபன் :—உமக்கென்ன ஏதாவது பைத்யமா.

விக்ரமவீரன் :—உக்ரசேன, உனக்கு இது சரியல்ல. பானுமதி வருகிறாள் ஏன் என்ன சங்கதி.

உக்ரசேனன் :—பெண்ணே பானுமதி வாவா. நீ நல்ல பதிவிரதையல்லவா. உன்னைப்பார்த்து சந்தேகிக்கலாமா, நான் வீண்பொறாமைக்காரன். கள்ள புருஷன் ஒருவன்தானே இருக்கிறான் இங்கே. அதிகமாக வேறு ஒருவரும் இல்லையே. நான் காரண மில்லாமல்தானே சந்தேகப் படுகிறேன்.

பானுமதி :—நான் என்ன சொல்லட்டும், என்னுடைய நல்ல நடைத்தைக்கு சுவாமிதான் சாக்ஷி. நீங்கள் இப்போது என்ன கண்டுபிடித்து விட்டீர்கள்.

உக்ரசேனன் :—என்ன கண்டுபிடித்து விட்டேன, இதுவேறே வீண்பெருமையா. நல்லது சற்றுப்பொறு. உன் சினேகிதனை காண்பிக்கிறேன்

அடேவாடா அப்பா என் தாமதம் செய்கிறாய். எழுந்துவா (துணிகளை உருவுகிறான்.)

வீரசேனன்:—உக்ரசேனா இது சரியல்ல, வேண்டாம்.

பானுமதி:—உங்களுக்கு வெட்கமா யிருக்க வில்லையா. புடைவைகளை இழுக்காதேயுங்கள் வேண்டாம்.

உக்ரசேனன்:—சற்றுபொறு அவசரப்படாதே, உன் யோக்கியதைதயை காட்டுகிறேன்.

ப்ரதாபன்:—என்ன காரியம் செய்கிறீர், பெண் பெண்டாட்டிகள் புடவைகளை வெளியில் இழுக்கலாமா. இது சரியல்ல.

உக்ரசேனன்:—அடேகறுப்பா எல்லா வற்றையும் வெளியில் எடுத்துவிட்டு கூடையை யெனக்கு காட்டு.

பானுமதி:—என் எல்லாவற்றையும் எடுக்கவேண்டும். அதுகூடாது எனக்கு காரணத்தை சொல்லுங்கள்.

உக்ரசேனன்:—வீரசேனா, நேற்று ஒருவன் என் வீட்டில் வந்திருந்து இந்தக் கூடையில் போட்டுத்தான் வெளியே கொண்டுபோகப்பட்டான். இன்றைக்கும் அவன் என் இந்தக் கூடையில் இருக்கக் கூடாது. அவன் இப்போது என்வீட்டிலிருப்பது நிச்சயம். என்சமாச்சாரம் நிஜம் என்பதை நான் நிச்சயமாய் நம்புகிறேன். அடே அழுக்குகள் எல்லா வற்றையும் வெளியில் எடுத்துப்போடு.

பானுமதி:—நீர் எவனையாவது அதில் கண்டு பிடித்தால் அவனை கண்டம் கண்டமாய் வெட்டலாம். கண்டுபிடிக்காமல் போனால் உம்மை என்ன செய்கிறது.

வீரசேனன்:—அங்கே ஒருவனும் இல்லை.

விக்ரமவீரன்:—உக்ரசேனா, இதுசரியல்ல. உனக்குத்தான் அவமானம் இது.

ப்ரதாபன்:—நீர் உமது மனம்போன போக்கெல்லாம் போகிறது சரியல்ல. இது வெறும் பொருமையே யல்லாமல் வேறல்ல.

உக்ரசேனன்:—நான் பார்க்கிறவன் இந்தக் கூடையில் இல்லை. நல்லது உள்ளே போவோம். அங்கே நிச்சயமாய் அகப்படுவான்.

வீரசேனன்:—உள்ளேயும் இல்லை, வெளியேயும் இல்லை. உன் மனதில் தான் இருக்கிறான்.

உக்ரசேனன்:—நீங்கள் இந்தத் தடைவை மட்டும் என் வீட்டில் சோதனை போடுங்கள். இந்த சமயம் அகப்படாமல் போனால் பிறகு என்னை கேலி செய்யுங்கள். எந்த இடத்தில் வேண்டுமானாலும் என்னை அவமானப் படுத்துங்கள். உக்ரசேனன் போல் பொருமையுள்ளவனென்று வேண்டுமானாலும் என்னை திருஷ்டாந்தமாக சொல்லுங்கள். தயவு செய்து இந்தத் தடவைமட்டும் என்னுடன் வந்து சோதனை போடுங்கள்.

பானுமதி:—(குணசுந்தரியை கூப்பிட்டு) குணசுந்தரி, நீயும் கோஷா அம்மாளும் இவடம்வந்து விடுங்கள். என் புருஷர் அங்கேதேட வரப்போகிறார்.

உக்ரசேனன்:—சோஷாவாவது அம்மாளாவது அவள்யார் தூதுக்காரமுண்டை.

பானுமதி:—முன் நம்மவீட்டுக்கு அடிக்கடிவருவாளே, ஜோசியச்சி, முரளீமீ என்பவள், அவள் தான் வந்திருக்கிறாள்.

உக்ரசேனன்:—அந்த சூன்யக்கார முண்டையா. அவளுக்கு என் வீட்டில் என்னவேலை. நான் வரவேண்டாமென்று சொல்லியிருக்கும்போது அவள் என் இங்கு வந்தாள். ஓகோ அவள் தூது வந்திருக்கிறாளோ. நமக்குஎல்லாம் இந்த ஜாடைகள் என்ன தெரிகிறது. முண்டை வந்த காரியத்தை முடித்துக் கொண்டாளா. நல்லது இவளை பூராவாக முடித்துக் கொள்ள நான் விடுவேனா. ஜோஸ்யக்காரியென்றும் வைத்யச்சி யென்றும் இப்படி எத்தனைபெயர்கள் வேஷம் போட்டுக்கொண்டு தூது வருகிறார்கள். பெண்கள் சாமர்த்தியமே சாமர்த்தியம். நல்லது முண்டை இங்கேவா. உன் முதுகு எலும்பை எடுத்து விடுகிறேன். சீக்கிரம் இறங்கிவா சூன்யக்கார முண்டை, இங்கேயார் உன்னை வரச்சொன்னார்கள். உன்னை யமலோகம் அனுப்பிவிடுகிறேன் வா. நீ அங்கேபோய் ஜோஸியம் சொல்லிக் கொள்ளலாம்.

பானுமதி:—நீங்கள் அவளை ஒன்றும் செய்யக் கூடாது. அவள் எதோ தெரியாமல் வந்துவிட்டாள்.

உக்ரசேனன்:—தெரியாமல் வந்ததற்காகத்தான் அவளுக்கு இதோ பரிசுகள் கொடுக்கப்போகிறேன்.

பானுமதி:—பிரபுக்களே, நீங்களாவது சொல்லுங்கள். அவள் கிழவி, அடிதாங்கமாட்டாள். ஒரு அடி பட்டால் செத்துப்போய்விடுவாள்.

பீமவர்மன் (கோஷாவாக குணசுந்தரியால்கோல் கொடுக்கப்பட்டு, கூட்டிவரப் படுகிறான்.)

குணசுந்தரி:—இந்த வழியாகத்தான் அம்மா போகவேண்டும். இதோ ஒருபடிதான் இருக்கிறது.

உக்ரசேனன்:—(தடியால் அடித்துக்கொண்டு,) சூன்யகாரமுண்டை, ஜோஸியம் சொல்லுகிறாயா. யாருக்கு தூதுவந்தாய். உன் ஜோஸியத்துக்கு பரிசுகள் இதுபோதுமா. ஓடு. ஓடு, இனி என் வீட்டு வழிவந்தால் உன்னை யமலோகத்துக்கே அனுப்பி விடுவேன்.

(பீமவர்மன் போய்விட்டான்.)

துணசுந்தரி :—உமக்கு இது நன்ருயிருக்கிறதா? கிழவியை அடிக்க யாருக்குத்தான் தெரியாது. பாவம் அவளை பாதி உயிர் செய்துவிட்டீரே.

பானுமதி :—அவர் செய்கிறதெல்லாம் செய்யட்டும். இதெல்லாம் ஒரு கௌரவமென்று எண்ணியிருக்கிருர்.

கேசவதத்தன் :—பெண்பிள்ளை யென்ருலும் மீசையோடு இருக்கிற பெண்பிள்ளையை நம்பக்கூடாது. இந்த கோஷாவுக்குத்தான் என்ன மீசை!

உக்ரசேனன் :—அந்த சூனியகாரமுண்டைக்கு எல்லாம் வேண்டியதுதான். நல்லது எல்லோரும் மேலே வாருங்கள். என் பொருமையினுடைய பயனைமட்டும் பாருங்கள். இந்தத்தடவை தவறினல் இனிமேல் என்னை நம்பவேண்டாம்.

வீரசேனன் :—நல்லது அவன் சொல்லுகிறபடி போய்வருவோம்.

வீரசேனன், உக்ரசேனன், ப்ரதாபன், பராக்ரமன், விச்ரமவீரன், கேசவதத்தன், மேலே போகிருர்கள்.

துணசுந்தரி :—பாவம் அடி நல்ல பலமாகத்தான் விழுந்துவிட்டது.

பானுமதி:—நீ சொல்வது சரியல்ல அவனுக்கு இந்த அடி போதாது.

துணசுந்தரி:—அந்தத்தடியை கோவிலில்வைத்து பூஜை செய்யவேண்டும். நல்ல சமயத்தில் துஷ்டனை தண்டிப்பதற்கு என்று காலதண்டம் போல் வந்து சேர்ந்தது.

பானுமதி :—நம்மிடத்திலோ தோஷம் ஒன்றுமில்லை. அவனை இத்துடன் விட்டுவிடலாமா, அல்லது இன்னும் எதாவது வேடிக்கை செய்யலாமா? உன் இஷ்டமென்ன?

துணசுந்தரி :—அவனுடைய தேகக்கொழுப்பும் துராசையும் இத்துடன் அடங்கியிருக்கும். அவனைப் பிடித்த பிசாசுக்கு வட்டியும் முதலுமாக, ஆகாரம் கிடைத்துவிட்டது. அப்படி இன்னும் அது அவனை விடாமலிருந்தால் அப்போதுதான் நாம் அழைத்தால் அவன் வருவான்.

பானுமதி:—நமது புருஷர்களுக்கு, நாம் இவனுக்கு செய்திருக்கிற மரியாதையை சொல்லலாமா.

துணசுந்தரி :—அப்படியே செய்வோம். உன் புருஷன் மனதிலிருந்தும் அவன் சந்தேகங்களெல்லாம் நீங்கட்டும். ஒருவேளை அவர்களும் சேர்ந்து அவனை மறுபடி தருவித்து அவமானப்படுத்த வேண்டுமென்று யோஜித்தால், நாமும் அதில் சேருவோம்.

பானுமதி —அவர்களும் சேர்ந்தால் நாம் அவனை பகிரங்கமாக அவமானப் படுத்தலாம். மேலும் அவனை அப்படி பகிரங்கமாக அவமானப்படுத்தாத் போதிலும் அவனுடைய அக்ரமம் இத்துடன் அடங்காது.

துணசுந்தரி:— நல்லது அப்படியே செய்வோம்; எனக்கும் இத்துடன் விடுவதில் இஷ்டமில்லை.

(போகிருர்கள்.)

(இன்னும் வரும்.)

## THE STORIES OF MAHABHARATA—FOR CHILDREN.

*(Specially written for the Vivekachintamani By S. Muthu Iyer B. A.)*

## மஹாபாரத கதைகள்—சிறுவர்களுக் குபயோகமாக எழுதப்பட்டன.

### 1. சந்திரவம்ச வரலாறு.

முற்காலத்தில் பாரதவர்ஷமாகிய நமது தேசத்தில் பரம்பரையாய் நெடுங்காலம் அரசு புரிந்துவந்த க்ஷத்திரிய ராஜாக்கள் சூரியவம்சத்தவர் என்றும் சந்திரவம்சத்தவர் என்றும் அக்கினிவம்சத்தவர் என்றும் மூன்று திறத்தாராகப் பிரிக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் முறையே சூரியன், சந்திரன், அக்கினி என்னும் மூன்று தேவதைகளின் வழியேதோன்றிய சந்ததியாராதலின் அப்பெயர்களை யேற்றிருந்தார்கள். இங்கு நாம் அறிந்துகொள்ள வேண்டியவர் அஸ்தினபுரத்தையாண்டுவந்த சந்திரவம்சத்தரசர்களேயாதலின் அவர்களது மரபைமட்டும் இங்கு விளக்குவோம். இவ்வம்சத்துக்கு ஆதிபுருஷனை சந்திரனுக்குப் புதன் என்று ஒரு புத்திரன் உண்டானன். அப்புதன் இளையென்பவளை மணஞ்செய்து புரூரவா என்பவனைப்பெற்ருன். அப்புரூரவா உருப்பசியை† மணஞ்செய்து ஆயு என்பவனைப் பெற்ருன். ஆயுவின் மகன் நகுஷன். நகுஷன் மகன் யயாதி. யயாதி சன்மிட்டையை‡ வேட்டுப் பூரு என்பவனைப் பெற்ருன். பூருவின் வழியே பரதன் தோன்றினன். இவனல்தான்

† ஊர்வசி. ‡ விரும்பி.

நம்தேசத்துக்குப் பாரதவர்ஷமென்னும் பெயருண்டாயிற்று. பரதன் வழியே அத்தி தோன்றினன். இந்த அத்தி என்பவன் தான் அத்தினபுரத்தை இராஜதானியாகத் தாபித்தவன். இவன் குலத்தில் குரு என்பவன் தோன்றினன். இவன் பெயரால் தான் இந்தக்குலத்துக்குக் குருகுலம் என்னும் பிரசித்தியான பெயர் உண்டாயிற்று. இவன் மகன் சந்தனு. இவன் முதலில் கங்கை என்பவளை மணம்புரிந்து பீஷ்மன் என்னும் மகனையும், பின்பு பரிமளகந்தியைப் புணர்ந்து சித்திராங்கதன் விசித்திர வீரியன் என்னும் இரண்டு புத்திரர்களையும் பெற்றான். விசித்திரவீரியனுக்கு திருதராட்டிரன், பாண்டு, விதுரன் என்று மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். முன்னையிருவரும் க்ஷத்திரியஜாதி மனைவியரிடத்தும் கடையிலொருவன் சூத்திரஜாதி மனைவியிடத்தும் பிறந்தார்கள்.

## 2. பஞ்ச பாண்டவர்கள்.

விசித்திரவீரியன் இறந்தபின் அவன் தமையனாகிய பீஷ்மன் அவ்விசித்திரவீரியன் மக்களாகிய திருதராட்டிரன், பாண்டு, விதுரன், என்னும் மூவரில் மூத்தவனாகிய திருதராட்டிரனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்து முடிசூட்டிப் பாண்டுவைச் சேனாபதியாகவும் விதுரனை மந்திரியாகவும் நியமித்தான். அக்காலத்தில் பாண்டு குந்தி, மாத்திரை யென்னும் இரண்டு மனைவியர்களை மணம் செய்து ஐந்து பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் மூத்தவன் பெயர் உதிட்டிரன் அல்லது தர்மபுத்திரன். இரண்டாவன் வீமன். மூன்றாவன் அருச்சுனன். நான்காவன் நகுலன். ஐந்தாவன் சகாதேவன். யுதிட்டிரன் சத்தியமும் தருமமும் உடையவன். வீமன் மகாபலமுள்ளவன், கதையெடுத்துச் சண்டை செய்வதில் தனக்குச் சமானமில்லாதவன். அருச்சுனன் வில்வித்தையில் மகாவல்லவன். இவனுடைய வில்வித்தையின் பெருமையைப் பற்றித்தான் இவன் எய்யும் பாணங்கள் எடுக்கும்போது ஒன்றாய்த் தொடுக்கும்போது பத்தாய் விடுக்கும்போது நூறாய்ப் படும்போது ஆயிரமாக வளருமென்று புகழ்வார்கள். இம்மூவரும் குந்தியென்னும் மூத்தவள் வயிற்றிற் பிறந்தவர்கள். நகுல சகாதேவர் இருவரும் மாத்திரை யென்னும் இளையவள் புத்திரர்கள். பாண்டு தன் மக்கள் குழந்தைகளாயிருக்கும்போதே வானுலகை அடைந்தான். ஆதலால் பாண்டவர்கள் என்னும் இந்த ஐந்து பிள்ளைகளும் அவர்கள் பெரியப்பனாகிய திருதராட்டிரனால் வளர்க்கப்பட்டு வந்தார்கள்.

## 3. நூற்றுவ ரென்னும் கௌரவர்கள்.

பாண்டுவின் தமையனும் அரசனுமாகிய திருதராட்டிரன் பிரவிக்குருடன். இவன் காந்தார தேசாதிபதியின் மகளும் மகாபதிவிரதையுமாகிய காந்தாரி என்னும் பெண்ணை மணம் புரிந்து நூறு ஆண்மக்களையும் ஒரு பெண்குழந்தையையும் பெற்றான். அவர்களில் மூத்தவன் பெயர் துரியோதனன். இவன் சுபாவத்தில் மிகவும் கொடியவன், பால்யம் முதலாகவே பாண்டவர்களைப் பகைத்து அவர்களைக் கொல்லுதற்காகப் பலவிதமாக முயன்று வந்தான். ஒருபொழுது வீமசேனன் நித்திரை செய்கையில் அவனைக் கொடிகளாற் கட்டிக் கங்காநதியிற் போட்டுவிட்டான். வீமன் நல்லவேளையாய்ச் சாகாமல் கட்டுகளை அவிழ்த்துக்கொண்டு கரையேறிப் பிழைத்தான். மற்றொருபொழுது நஞ்சுள்ளகொடிய பாம்புகளாற் கடிக்கச் செய்தான். அதற்கும் அவன் சாகவில்லை. இன்னொருபொழுது சோற்றில் விஷம் கலந்து கொடுத்தான். அதற்கும் சாகவில்லை. ஆயுள் கெட்டியாயிருந்தால் யாவர் யாது செய்தால் தானென்ன? உயிர்க்குக் கெடுதியுண்டாகாதன்றோ? அதனோடு தெய்வபலமும் உண்டாமாயின் எவருடைய கொடுமையும் தீமையும் யாதும் செய்யவல்லதல்ல.

(இன்னும் வரும்.)

எஸ். முத்து ஐயர்.